# இன்றுமுதல் ஆறே 6 வாரங்களில்

# க்ளியர்·டோன்

## க்ரீம் உமக்கு மெருகேற்றும் சிகப்பழகு·

முதல் வாரம்



மூன்றே நாட்களில் என்
சருமத்துக்கு அதிக மென்மை!

2ம் வாரம்



மாசுமறு எல்லாம் மறைந்து.
அப்பாடா!

3ம் வாரம்



பாருங்க! இப்ப என்
முழங்கைகள் மழமழ.

4ம் வாரம்



"ஒளிவீசுதே உன்றோட
மேனியழகு" என்றாள் என் சிநேகிதி.

5ம் வாரம்



வெய்யிலிலே கூட என்
உடம்பு கறுக்கலே. பத்திரமா!

6ம் வாரம்



இப்போது நான் ஒரு
க்ளியர்-டோன் ரசிகை!

க்ளியர்-டோனில் உள்ள ஒப்பற்ற ஃபார்முலா உங்கள் சருமத்தை ஒளிநிறக்க வைக்கிறது. சிகப்பழகு பொலிய அதோடு மட்டுமல்ல. க்ளியர்-டோனில் உள்ள தனிச் சிறப்புப் பொருள் ஒன்று, அலங்கோல மாசுமறுக்களை அகற்றுகிறது. க்ரீமில் உள்ள மாயிஸ்ச்சரைஸர் தனதன ஈரவளமூட்டி உங்கள் மேனியழகுக்கு கவனிக்கத்தக்க மென்மை ஒளிமெருகூட்டுகிறது — விருக்கென ஆறே 6 வாரங்களில்!

விடாமல் அன்றாடம் இரு தடவைகள் க்ளியர்-டோன் இட்டு வந்தீரானால் அழகுவண்ண விளைவுகளை — வெய்யில், நிழல் எதனிலும் — நிலைநிறுத்திக் கொள்ள அதுவே உதவும்.




## க்ளியர்·டோன்

லண்டன் • பாரிஸ் • நியூயார்க்

# சாத்தியம்தானா, டீ.வி.–ரேடியோ சுயாட்சி ?



**உரையாடலில் பங்கு பெறுவோர்: ரகுமான்கான்; உஷா சுப்ரமணியம்; அன்பரசு**

உஷா சுப்ரமணியம்: ஜனநாயகத்தில் எந்த ஒரு 'மீடியாவும்' அரசாங்கத்தின் கட்டுப்பாட்டுக்குள் இருப்பதென்பது ஏற்றுக் கொள்ளக்கூடிய விஷயமே அல்ல. நம் நாட்டில் இத்தனை நாட்களாக அப்படி இருந்ததே பெரிய தவறு. ஆனால் இப்போது சொல்கிற 'பிரச்சார் பாரதி' மசோதாவை நான் படித்துப் பார்த்ததில், முழு சுயாட்சிக்கான அறிகுறிகள் இல்லை. புதிய மொந்தையில் பழைய கள்தான். எனினும், என்னைக் கேட்டால் முழு சுயாட்சி இப்போது தேவையில்லை; நாம் அதற்கு இன்னும் தயாராகவில்லை என்றே சொல்வேன்.

ரகுமான்கான்: 'சுயாட்சி' அவசியம் இல்லை என்று சொல்கிறீர்களா?

உஷா: 'சுயாட்சி' ரொம்ப ரொம்பத் தேவை. ஆனால், அது படிப்படியாகத்தான் கிடைக்க வேண்டும். இப்போது ஆரம்பிக்கலாம். இப்போது கொண்டு வரப் போகும் மசோதாப்படி பார்த்தால் கூட முழு சுயாட்சியாக அது இருக்கப் போவதில்லை. 'பிரச்சார பாரதி' நிறுவனத்தில் இருக்கப் போகிற நான்கு முழு நேர கவர்னர்களையும் ஏழு பகுதி நேர கவர்னர்களையும் நியமிப்பது செய்தி ஒலிபரப்புத் துறை அமைச்சகம்தான். அப்படி என்றால் அந்த அமைச்சகத்தின் பிடியில்தான் இருக்கப் போகிறது. முழுமையான சுயாட்சி கிடையாது. இது தவிர துணை ஜனாதிபதி, பிரஸ் கவுன்சில் சேர்மன், அரசு சார்பாக ஒரு பிரதிநிதி என்று எல்லோருமாகச் சேர்ந்து, தேர்ந்தெடுக்கிற பத்து உறுப்பினர்கள் நியமிக்கப்படுவார்கள் என்று சொல்லப் பட்டிருக்கிறது. சரி, முழுமையான சுயாட்சி என்று வைத்துக் கொண்டால் கூட, அதில் ஓரளவுக்கு அரசு ஆதிக்கம் இருக்கத்தான் செய்யும். ஏனென்றால் பிரச்சார பாரதி நடத்தப் பணம் அரசிடமிருந்துதான்

வந்தாக வேண்டும். பணம் எப்போது அரசால் கொடுக்கப்படுகிறதோ அப்போதே அதன் கட்டுப்பாடும் இருக்கத்தான் செய்யும். ஆக 'சுயாட்சி' என்பது மிகப் பெரிய விஷயம். அது சாத்தியமில்லை என்றுதான் நான் நினைக்கிறேன்.

அன்பரசு எம்.பி.: மக்களாட்சி அமைப்பில் தேர்ந்தெடுக்கப்படுகிற அரசு தங்களுடைய கொள்கைகளையும் திட்டங்களையும் நிறைவேற்றப் பாடுபடுகிறது. அந்தக் கொள்கைகளையும் திட்டங்களையும் மக்களுக்குச் சொல்ல உதவுகிற சாதனம் டீ.வி.யும், ரேடியோவும்தான். மக்களை ஊடுருவுகிற இந்தச் சாதனங்கள் மூலமாகத்தான் இவற்றைச் சொல்லியாக வேண்டும். எனவே, இவை 'எஜமானரின் குரலாகத்தான்' ஒலிக்க வேண்டும். ஒலிக்க முடியும். இதில் சுயாட்சி என்று சொல்லிக் கொண்டாலும் அரசின் திட்டங்களையும் விளக்கங்களையும் சொல்வதற்கு 'நெறிமுறை விளக்கங்கள்' (Guide Lines) இருக்கத்தான் செய்யும். இதை அரசு வற்புறுத்தவே செய்யும். அதைத் தவறென்று சொல்ல மாட்டேன். அதுதான் முறையுங்கூட! அப்படித்தான் இந்த அமைப்புகள் இயங்க வேண்டும். இதில் சுயாட்சி என்பதெல்லாம் கண்துடைப்பு. அன்றைக்கு ராஜீவ் காந்தியையே டீ.வி.யில் காட்டுவதாகச் சொல்லிக் கொண்டிருந்தவர்களுக்கு நான் சொல்கிறேன், இப்போது யாரைக் காண்பிக்கிறார்கள்? வி. பி. சிங்கையும் தமிழக முதலமைச்சரையும்தானே! இதில் தவறொன்றுமில்லை. இந் நிலையில் நாங்கள் சுயாட்சி வழங்குகிறோம் என்று சொல்வதெல்லாம் நாடகம். அது மாதிரி அமையவும் கூடாது. முழு சுயாட்சி என்ற நோக்கம் நல்லதாக இருக்கலாம். ஆனால் நடைமுறையில் அது சாத்தியமில்லை என்றுதான் நான் நினைக்கிறேன்.

ரகுமான்கான்: நான் அப்படி நினைக்கவில்லை. சுயாட்சி தேவை. அது நடைமுறையில் சாத்தியப்படும் என்றும் நினைக்கிறேன். இங்கிலாந்திலுள்ள பி.பி.சி. கூட ஒரு தனிப்பட்ட நிறுவனம் அல்ல. பி.பி.சி.யின் நிர்வாகிகள் அந்த நாட்டுப் பிரதமரால் நியமிக்கப்படுகிறவர்கள்தாம். எதிர்க்கட்சி, ஆளுங்கட்சி இரண்டிலிருந்தும் 'டைரக்டர்கள்' போடுகிறார்கள். அரசு நியமிக்கிற நிர்வாகிகள்தாம் என்றாலும் பி.பி.சி.தான் 'எஸ் மினிஸ்டர்' நிகழ்ச்சி மூலம் அமைச்சர்களைக் கிண்டல் செய்தது. நாம் பல விஷயங்களில் இங்கிலாந்தின் மரபுகளைப் பின்பற்றி வருகிறோம். இது கூட அது மாதிரிதான். மீடியா என்பது எஜமானரின் குரலாகத்தான் ஒலிக்க வேண்டும் என்று எம்.பி. அவர்கள் சொன்னார்கள். ஆக, கடந்த காலத்தில் ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ் ஆகத்தான் இருந்தது என்று ஒப்புக் கொண்டீர்கள். அப்படி இருக்கக் கூடாது என்றுதான் நாங்கள் சொல்கிறோம்!

அன்பரசு: அப்படி எல்லாம் நான் ஒன்றும் ஒப்புக் கொள்ளவில்லை. 'ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ் ஆகத்தான் இருக்க முடியும்' என்றுதான் சொன்னேன். இன்றும் அப்படித்தான் இருக்கிறது என்கிறேன்.

ரகுமான்கான்: முறைப்படி பணம் செலுத்தியும் கடந்த காலத்தில் தமிழக அரசின் கூட்டுறவுத் துறை விளம்பரத்தை ஒளிபரப்ப மறுத்தது ஏன்?

அன்பரசு: மேலேயிருந்து சொல்லியிருக்க மாட்டார்கள். இங்கே உள்ள நிலைய அதிகாரிகள் மேலிடத்தில் ஏதாவது சொல்வார்களோ என்று தாங்களாகவே பயந்து கொண்டு ஒளிபரப்ப மறுத்திருக்கலாம்.

உஷா: சென்னைத் தொலைக்காட்சியில் காங்கிரஸை எந்த அளவுக்கு 'புரஜக்ட்' செய்தார்கள் என்பதை நாம் பகிரங்கமாகவே பார்த்திருக்கிறோம். இதே தவறு 'சுயாட்சி நிர்வாகத்'திலும் ஏற்பட வாய்ப்புண்டு. ஏனென்றால், சுயாட்சியின் வெற்றி இந்த அதிகாரிகளின் திறமை, தகுதியைப் பொறுத்துத்தான் இருக்கும். இதற்கு அடுத்த ஐந்தாண்டுகளுக்குள் நாம் தகுந்த மனிதர்களை உருவாக்க வேண்டும். ஐ.ஏ.எஸ்., ஐ. பி. எஸ். மாதிரி இந்தியன் மீடியா சர்வீஸ் (Indian Media Service) என்று ஒரு தகுதி நிலைத் திட்டத்தைச் செயல்படுத்தலாம். அப்போதுதான் சுயாட்சி வெற்றி பெற முடியும்.

அன்பரசு: என்னைக் கேட்டால் முழுமையான சுயாட்சி என்பதை விட இருக்கும் சேனல்கள் தவிர, வேறு சேனல் ஒன்றைத்

"இன்றைக்கு எங்க ஆபீசிலே யாருமே தூங்கலை!"

"அட, பரவாயில்லையே!"

"ஆமாம். கமலுக்கு எந்தப் படத்துக் காகப் பத்மஸ்ரீ பட்டம் கொடுத்திருப்பாங்கன்னு பேசிக்கிட்டிருந்தோம். நேரம் போனதே தெரியலை!"

— பழநி. கல்யாணம்.



# விளம்பரத்துக்காகப் போராட்டமா?



"மலிவான விளம்பரம் பெறுவதற்காக நீங்கள் அடிக்கடி போராட்டங்களை நடத்துவதாக ஒரு குற்றச்சாட்டு உங்கள் மீது கூறப்படுகிறதே?"

**வாழப்பாடி ராமமூர்த்தி சொல்கிறார்:**

"ஜனநாயகத்தில் எதிர்ப்பைத் தெரிவிப்பதற்கு மறியல், உண்ணாவிரதம் போன்றவை அங்கீகரிக்கப்பட்ட போராட்டங்களாகும். அப்படிப் பார்த்தால், நான் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவராகப் பொறுப்பேற்றுக் கொண்ட பிறகு, இரண்டு போராட்டங்களைத்தான் நடத்தியிருக்கிறேன். முதல் முறை, வறுமையை ஒழிக்கும் திட்டங்களில்,பஞ்சாயத்துயூனியன்தலைவர்களுக்கு முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்பதற்காகவும், அடுத்த முறை, அத்தியாவசியப் பொருட்கள், தட்டுத்தடங்கலில்லாமல் ரேஷனில் கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தோழமைக் கட்சிகளுடன் சேர்ந்தும், உண்ணாவிரதம் இருந்தேன். இப்போது, மறைமலை நகர் ரயில் நிலையத்துக்குக் காமராஜ் பெயரை வைக்க வேண்டுமென்று நான் நடத்தப் போவது மூன்றாவது போராட்டம்.

"காமராஜ் பெயரில் பல்கலைக் கழகம், மாவட்டம் இருக்கிறது என்றும், அவரது பெயரை எந்த ரயில் நிலையத்திற்கு வேண்டுமானாலும் வைத்துக் கொள்ளலாம் என்றும், மறைமலை அடிகளைப் போற்றும் வகையில், மறைமலை நகர் ரயில் நிலையம் என்று அழைக்கப்பட வேண்டும் என்றும் கலைஞர் கூறுவது சரியல்ல! எங்கள் வாதமே, ஏற்கெனவே வைக்கப்பட்ட பெயரை மாற்ற முற்படுகிறார் என்பதே! ரயில் நிலையம் இல்லாத இடத்தில், மறைமலை நகர் மக்களின் வேண்டுகோளை ஏற்று ரயில் நிலையம் வைத்து, அதற்குக் காமராஜ் பெயரை வைத்தவர் ராஜீவ் காந்தி. இப்போது மறைமலை அடிகளுக்குவாதாடும்கருணாநிதி அப்போது எங்கே போயிருந்தார்? ஆகவே, நாங்கள் சொல்கிறோம், கருணாநிதி பண்ணுவது அரசியல்."

சந்திப்பு: **தில்லப்பா**

---

தனியாக ஏற்படுத்தி அவர்களிடம் விமர்சிக்கும் பொறுப்பைக் கொடுக்கலாம். அது இரண்டையும் 'பேலன்ஸ்' செய்யும்! அதை விட்டு விட்டு முழுமையான சுயாட்சி என்று கொடுத்தால், அரசுக்கும் டீ.வி., ரேடியோவுக்கும் நிச்சயம் மோதல் வரும். கலைஞர் ஒரு திட்டம் போட்டுச் செயலாற்றுகையில் அதை டீ.வி குறை கூறினால் பொறுத்துக் கொள்கிற மனப்பக்குவம் எல்லோருக்கும் இருக்கிறதா?

ரகுமான்கான்: ஓர் அரசாங்கத்தின் திட்டங்களை — நல்லது கெட்டதுகளை மீடியா மூலம் விவாதிக்க வேண்டும் என்ற ஜனநாயகக் கருத்தைத் தேசிய முன்னணி அரசும் சரி, தி.மு.க அரசும் சரி ஏற்றுக் கொண்டுதான் இருக்கிறது. நாங்கள் தயாராகத்தான் இருக்கிறோம்! ஆனால் உங்கள் காலத்தில் பஞ்சாயத்து ராஜ் நல்லதா கெட்டதா என்று விவாதிக்க ஒரு வாய்ப்புக் கூட மீடியாவில் கொடுக்கப்பட வில்லை. அதுதான் வருத்தம்.

அன்பரசு: பஞ்சாயத்து ராஜ் திட்டத்திற்கு எல்லா மாநிலங்களிலும் விவாதம் நடந்தது. அரசு அதிகாரிகள், ஐ.ஏ.எஸ் அதிகாரிகள் மட்டத்தில் விவாதிக்கப்பட்டது.

ரகுமான்கான்: நான் சொல்வது அதையல்ல. டீ.வி.யில் பஞ்சாயத்து ராஜ் பற்றி ராஜீவ் மற்றும் சிதம்பரம் போன்றவர்கள் சொன்னதை மட்டும் காட்டிய நீங்கள் அதே வாய்ப்பை ஏன் எங்கள் கட்சித் தலைவர்களுக்குக் கொடுக்கவில்லை என்பதுதான் என் கேள்வி,

அன்பரசு: உங்கள் ஆட்சியில் இப்போது அதைச் செய்வீர்களா....?

ரகுமான்கான்: மத்திய அமைச்சர் உபேந்திரா தெளிவாகச் சொல்லி இருக்கிறாரே. மே மாதம் தான் மசோதா முழு வடிவம் பெறுகிறது. அதற்கு முன்பாக இது தொடர்பாக விவாதம் நடத்துங்கள்; கருத்தரங்கு நடத்துங்கள், உங்கள் ஆலோசனைகளை எங்களுக்கு எழுதுங்கள் என்று வெளிப்

படையாகவே சொல்லியிருக்கிறார். நம்முடைய இந்த உரையாடல் கூட அதற்கு உதவலாம். இதெல்லாம் முடிந்த பிறகுதான் மசோதா இறுதியாக்கப்படும். உங்கள் காலத்தில் நடந்த தவறுகளைத் திருத்துவதற்கு தேசிய முன்னணியில் வழி காணப்படும்.

உஷா: வானொலியோ, டீ.வியோ — அதை ஒரு பிரசார சாதனம் அல்லது செய்தி நிறுவனம் என்ற வடிவத்தில் மட்டும் தான் நீங்கள் பார்க்கிறீர்கள். அதற்கு மேல் சமுதாயப் பொறுப்பு, மக்களுக்குக் கற்பிக்கும் நோக்கம், மக்களை மேம்படுத்தும் நோக்கம், பொழுது போக்கு நோக்கம் முதலிய எல்லா அம்சங்களும் அதில் இருக்கின்றன.

ரகுமான்கான்: ஒப்புக்கொள்கிறேன். ஆனால் டீ.வி.யில் நடக்கிற வேடிக்கைகளை எல்லாம் பார்த்தால்..... ஒரு நாள் எம்.கே.ராதா நடித்த அபூர்வ சகோதரர்கள் படத்தை ஒளிபரப்பினார்கள். ஆனால் அறிவித்தது கமலஹாசன் நடித்த அபூர்வ சகோதரர்கள் படம் என்று. இன்னொரு நாள் சாதிக் பாட்சாவைக் காண்பித்து விட்டு பொன். முத்துராமலிங்கம் என்று சொன்னார்கள்!

அன்பரசு: அதைச் செய்தவர் தெரியாமல் செய்திருக்கலாம்.

ரகுமான்கான்: அப்படிப்பட்ட ஆட்கள் இதில் வேலையே பார்க்கக் கூடாது.

அன்பரசு: இப்படிப் பட்ட சின்ன விஷயங்களுக்காக ஒரு பிரதமரையோ, அரசாங்கத்தையோ குற்றம் சுமத்த முடியுமா....?

ரகுமான்கான்: முந்தைய பிரதமருக்கே கூட இது மாதிரி நிலைமைதான்! இந்தத் துறையின் டைரக்டர் பெயரைக் குறிப்பிட்டுச் சொல்லும் போதே கூட அவர் தவறாகச் சொன்ன உதாரணங்களும் உண்டு.

அன்பரசு: அந்த அளவுக்கு ஜனநாயகவாதியாக, தலையீடு செய்யாதவராக ராஜீவ் இருந்திருக்கிறார். அவ்வப்போது உத்தரவிடுபவர் என்றால் பெயரை ஞாபகம் வைத்திருந்திருப்பாரே!

ரகுமான்கான்: அறியாமைக்குப் பெயர் ஜனநாயகம் அல்ல. தலையீடு இன்மை என்றும் பொருளல்ல.

உஷா: விவாதத்தின் போக்கே திசை மாறுகிறது. இந்த இடத்தில் நான் ஒன்று சொல்ல விரும்புகிறேன். பிரச்சார் பாரதி அமைத்தாலும் கூட அதை 'சென்ட்ரலைஸ்' பண்ணாமல் இரண்டு பிராந்தியங்களாகப் பிரிக்க வேண்டும். டெல்லியைத் தலைமையிடமாக வைத்து இயங்கப் போகும் பட்சத்தில் சரியாக இயங்காது. குறைந்த பட்சம் தெற்குப் பிராந்தியம், வட பிராந்தியம் என்று பிரித்துத்தான் ஆக வேண்டும். தென்னிந்தியாவுக்குச் சரியான பிரதிநிதித்துவம் வேண்டும்.

ரகுமான்கான்: நான் கூட அதை ஒப்புக்கொள்கிறேன்.

உஷா: இந்த பிராச்சார் பாரதி மசோதாப் படி நிகழ்ச்சிகளின் சாராம்சத்தில் வேண்டுமானால் சுதந்திரம் கொடுக்கப் படலாமே தவிர நிர்வாகத்தின் பொறுப்பு அமைச்சகத்திடம்தான் இருக்கும். இது முதல் படிதான். ஒரு விஷயத்தை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். எப்படியானாலும் வெறுமனே சினிமா, ஒளியும் ஒலியும் என்று பொழுது போக்கு விஷயங்களாக இல்லாமல், ஆக்கபூர்வமாக இருக்க வேண்டும். பிலிப்பைன்ஸில் பப்ளிக்பாப்புலாரிட்டி என்று மூன்றாந்தர நிகழ்ச்சிகளே ஒளிப்பரப்பாகின்றன என்று படித்தேன். அப்படி இங்கு ஆகிவிடக் கூடாது. பலதுறைகளிலும் உள்ளவர்களைக் கலந்தாலோசித்து சரியாக விஷயங்களைத் தரவேண்டும்.

படம், தொகுப்பு: **சுந்தரராஜன்**

## அடுத்த இதழில்......



- **வால்மீகி ராமாயணம்:**

  **"நான் யதார்த்தமாகப் படமெடுத்திருக்கிறேன்..."**

  — டைரக்டர் கே. எஸ். ஸ்ரீனிவாசன் கூறுகிறார்.

- **பாண்டிச்சேரி தேர்தல்**

  — நேரடி சர்வே

# இலவசம்

ஒரு
ஸெராமிக் கிண்ணம்
பாசத்துடன் அளிப்பது
ஃபாரெக்ஸ்!







அழகான ஒரு ஸெராமிக் கிண்ணம். அதிலே உங்கள் குழந்தை விரும்பி உண்ணும். ஊட்டமிக்க சத்துணவாம் ஃபாரெக்ஸ்–வெஜ். ஒவ்வொரு டின்னுடனும் கேட்டுப் பெறுவீர் ஒரு இலவச ஸெராமிக் கிண்ணம்.

தேர்ந்தெடுத்த சில இடங்களில் மட்டும் அளவுக்குட்பட்ட ஸ்டாக்



Gx/189.90.Tml.



**தி. மு. க. மாநாடு:**

# கரம் அசைத்துக் களைத்துப்போன கலைஞர்!

**ஊ**ர்வலம் சிந்தாமணியில் ஆரம்பித்து, ஜங்ஷன் ரயில்வே காலனி மாநாட்டுத் திடலில் முடிய வேண்டும். ஆனால், அன்று பகல் முழுவதும் தி. மு. க. தொண்டர்களின், சாரி. சாரியான வருகையால் திருச்சி சாலைகள் பலவும் ஊர்வலங்களாகவே காட்சியளித்துக் கொண்டிருந்தன.

ஊர்வலத்தின் முதலில் நெற்றியில் பட்டையடித்த யானை வந்தது. பின்னர், மூன்று யானைகளில் சேர, சோழ, பாண்டியர் போல வேடமிட்டுக் கொண்டு தொண்டர்கள் அமர்ந்து வந்தார்கள். மகளிர் அணி, மாணவர் அணி, இளைஞர் அணி, வழக்கறிஞர் அணி, தொண்டர் அணி, தொழிலாளர் அணி என்று பேரணி நீண்டது. ஊர்வலத்தைக் கலைஞரும் மற்ற தலைவர்களும் மாநாட்டுத் திடலுக்கு ஒரு பர்லாங் முன்னால் நின்று கண்டு களித்தார்கள். ஊர்வலத்தினரை நோக்கிக் கைகளை ஆட்டியும், கூப்பியும், களைத்துப் போனார் கலைஞர். தொண்டர்கள், மனைவி குழந்தைகளுடன் வந்திருந்தனர். கலைஞரைக் கண்டதும் "தலைவா... தலைவா" என்று அழைத்து ஆனந்தக் கூத்தாடினார்கள். இளைஞர் அணியினர் 'டுவிங்கிள் டுவிங்கிள் லிட்டில் ஸ்டார். ஸ்டாலின் எங்கள் ஸூப்பர் ஸ்டார்' என்று முழங்கியவாறே சென்றனர். போக்குவரத்து ஊழியர்கள், 'இருபது சதவீதம் போனஸ் தர இருக்கிற கலைஞர் வாழ்க' என்று கோஷமிட்ட போது, மேடையில் சிரிப்பலை. இந்தியை எதிர்த்துத் தீக்குளித்து மாண்டவர் தி. மு. க. தொண்டர் சௌந்தர்ராஜன். அவரது உருவத்தை அப்படியே செய்து, படுக்கவைத்து ஊர்வலத்தில் எடுத்து வந்தார்கள். உற்சாகத்தோடு கையாட்டி வந்த கலைஞர், அந்த உருவத்தைக் கண்டதும் கலங்கி விட்டார். மீண்டும் அவர் சகஜநிலைக்கு வரச் சற்று நேரம் ஆயிற்று. தி. மு. க. தலைவர்களுக்குப் பின்னால் நின்றுகொண்டு, மதுரை ஆதீனம் ஊர்வலத்தை எட்டி எட்டிப் பார்த்தது கொஞ்சம் வித்தியாசமாக இருந்தது. ஊர்வலம் ஓர் இடத்தைக் கடக்க நான்கு மணி நேரம் ஆனது!

**தி**ருச்சி நகரம் முழுக்க ஆங்காங்கே கலைஞர், மாறன், ஸ்டாலின் ஆகியோரின் அறுபது அடி உயர கட் அவுட்கள். மாநாட்டு

முகப்பில் இவர்களது கட் அவுட்களைத் தவிர பெரியார், அண்ணா, அன்பழகன் கட் அவுட்கள். மாறனின் 60 அடி உயர கட் அவுட்டுக்குப் பக்கத்தில் சாதிக்கும், ஸ்டாலினின் அறுபது அடி உயர கட் அவுட்டுக்குப் பக்கத்தில் மனோகரனும், இருபது அடி உயர கட் அவுட்களில் காட்சியளித்தது. அபூர்வ சகோதரர்கள் அப்புக் குள்ளனை நினைவூட்டின.

மூன்று நாள் மாநாட்டின் போது நடந்த கவியரங்கம், கருத்தரங்கம் ஆகியவற்றைக் கூட்டம் உற்சாகத்தோடு கேட்டுக் களித்தது. மகளிர் கூட்டம் எதிர்பார்த்ததைவிட அதிகம். பிரமுகர்களின் பேச்சுக்களில் ஸ்டாலின் ஜால்ரா கொஞ்சம் தூக்கல்.

தி. மு. க. வினர் உற்சாகம் குறித்துக் கேட்பதற்காகப் புதுக்கோட்டையைச் சேர்ந்த முதுபெரும் தொண்டர் ஒருவரைச் சந்தித்தோம். கழகத்தின் எல்லா மாநாடுகளிலும் கலந்து கொண்ட அந்தத் தொண்டர் சொன்னார்: ''சோர்ந்து கிடக்கும் தொண்டர்களைத் தூண்டி, தூக்கத்திலிருந்து எழுப்புவதற்காக இந்த மாநாடு தலைவரால் கூட்டப்பட்டது என்பது உண்மையானால் எங்களை விட மகிழ்ச்சியடைபவர்கள் யாரும் கிடையாது. ஆனால், கழகத்தைத் தனது குடும்பத்தினரின் கையில் அவர் தாரை வார்த்துக் கொடுக்கும் ஒரு நிகழ்ச்சிக்குக் கால்கோள் விழாவாக இது அமைந்துவிட்டால் தி.மு.க. வின் எதிரி மு. க. வேதான்.''

பல தொண்டர்களின் குரலும் இதுதான் என்பது குறிப்பிடத்தக்கது.

— இல்லப்பா

படங்கள்: ராஜன்

* மாநாட்டு மேடை



# சிதறல்கள்

● பொதுக்குழு தீர்மானங்களை அதிவிரைவில் டைப் அடித்து நிருபர்களுக்கு விநியோகிக்கும் பொறுப்பை ஏற்றவர் கலைஞரின் உதவியாளரும், அரசு துணைச் செயலாளருமான சண்முகநாதன்.

● மாநாட்டின் பரபரப்புக்கு இடையில் கலைஞர் மனைவி ராஜாத்தி அம்மாள் வளர்த்து வரும் நாய்க் குட்டிக்கு உடல்நிலை சரியில்லாமல் போக..... கால்நடை உதவி இயக்குனர் வந்து நாயைப் பரிசோதித்தது.... ஒரு குட்டிப் பரபரப்பு..

● மேடையில் தி.மு.க. தலைவர்கள் ஊர்வலத்தைப் பார்த்துக் கொண்டிருந்த போது, சமீபத்தில் தி.மு.க. வில் சேர்ந்த சேலம் கண்ணன், கே.டி. ராமலிங்கம் போன்றவர்களும் பின்னால் நின்றனர். கலைஞரும், அன்பழகனும் திரும்பிய போதெல்லாம், அவர்கள் கண்களில் படாமல் கண்ணனும், ராமலிங்கமும் ஒதுங்கியது நல்ல தமாஷ்!

● இலாகா மாற்றியதால் 'பிகு' பண்ணிக் கொண்டு இருந்து வந்த ஆற்காடு வீராசாமி இப்போது முதல்வருடன் ராசியாகி விட்டார். 'ஆற்காடின்றி அணுவும் அசையாது' என்ற நிலை மறுபடியும் தோன்றியிருக்கிறது.

● பழனி நாடாளுமன்றத் தேர்தல் பணிகளைக் கவனிக்க அமைச்சர்களை நியமித்துப் பொதுக்குழுவில் பேசிய கலைஞர், ''அமைச்சர்கள் டி.பி.யை (டிராவலர்ஸ் பங்களா) நோக்கிப் படையெடுக்காமல் பம்பரமாய்ச் சுற்றி வேலை செய்ய வேண்டும்... இல்லையேல் கழகத்திற்கு டி. பி. (காசநோய்) வந்து விடும்'' என்று பேசியபோது ஒரே சிரிப்பு.

● ராஜீவுக்குப் பாதுகாப்பு ஏற்பாடு செய்து பழக்கப்பட்டுப் போன நம்ம ஊர் ஸஃபாரி போலீஸ்காரர்கள், ரொம்பத்தான் கெடுபிடி செய்கிறார்கள். இவர்கள் செய்யும் தடபுடலைப் பார்த்தால் பஞ்சாபில் இருக்கிறோமா என்று கூட எண்ணத் தோன்றுகிறது. இவர்களுக்கு ரொம்பவும் இடம் கொடுத்தால் தொண்டர்களுக்கும் தலைவருக்கும் மத்தியில் இடைவெளி ஏற்படுத்தி விடுவார்கள்.

● மாநாட்டில் கலாநிதி, ராதிகா, எஸ்.எஸ். சந்திரன், ராதாரவி ஆகியோர் மிஸ்ஸிங்.

# பாயும் போலீஸ் நாய்கள்!

"கழுத்திலும், மார்பிலும் கத்திக் குத்துகள். ரத்த வெள்ளத்தில் லட்சுமி அம்மாள் இறந்து கிடக்கிறார். போலீசுக்குத் தகவல் தரப்பட்டது. இன்ஸ்பெக்டரும் போலீஸ்காரர்களும் துப்பறியும் நாய் யுவராஜுடன் ஸ்தலத்துக்கு விரைகின்றனர். லட்சுமி அம்மாளின் காது, மூக்கு, கழுத்து மற்றும் கைகளிலிருந்த நகைகளைக் காணவில்லை என்பதால், கொலையாளி, நகைக்காகவே கொலை செய்திருக்கக்கூடும் என்பது போலீசின் அனுமானம். தரையிலும், சுவரிலும் ரத்தம் தெறித்திருந்தது. பிரேதத்தைப் போஸ்ட்மார்ட்டத்துக்கு அனுப்பிவிட்டு, ஏதாவது தடயம் இருக்கிறதா என ஆராயத் தொடங்கினர்.

"வீட்டின் ஒரு மூலையில் ரத்தக்கறை படிந்த துண்டு ஒன்று கிடைக்கவே, அதைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் கைபடாமல், எடுத்து வந்து, துப்பறியும் நாயிடம் மோப்பம் பிடிக்கத் தருகிறார். அடுத்த நிமிடம், யுவராஜ், அந்த இடத்திலிருந்து புறப்பட்டு ஓடத் தொடங்கியது.

"சிறிது நேரத்தில் அப்பகுதியிலிருந்த ஜட்கா ஸ்டாண்டை அடைந்தது. ஒரு குறிப்பிட்ட ஜட்காவினைச் சுற்றிச் சுற்றி வந்து, ஏறி குதிக்கத் தொடங்கியது. அந்த ஜட்காகாரரை அதட்டி விசாரித்த போது, முந்தைய நாள் இரவு ஒரு நபர் அந்த ஜட்காவில் ஏறிப் போன விஷயத்தைச் சொல்லி விட்டு, அந்த ஆசாமியை இறக்கி விட்ட இடத்துக்கு அழைத்துக் கொண்டு போகிறான்.

"அங்கே போன யுவராஜ், சுற்றிச் சுற்றி வருகிறது. மோப்பம் பிடித்தபடி, ஒரு குடிசை வாசலில் போய் நின்று கொண்டு, அதை நோக்கிக் குரைக்கிறது. குடிசையின் கதவைத் தட்ட, உள்ளேயிருந்து ஒரு நடுத்தர வயதுப் பெண்மணி கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து பார்க்கிறாள். நாய் வீட்டுக்குள் தாவிப் போய், சுற்றிச் சுற்றி வருகிறது. ஒரு மூலைக்குப் போய், ஒளித்து வைத்திருந்த ஒரு பையை எடுத்து வருகிறது. உள்ளே திறந்து பார்த்தால் — ரத்தக்கறை படிந்த ஒரு வேட்டி, பனியன். அதைப் பற்றிப் போலீஸார் விசாரித்துக் கொண்டே இருந்த போது, யுவராஜ் வெளியில் ஓடிப் போய்க் குப்பையில் மறைத்து வைக்கப்பட்டிருந்த ஒரு கத்தியை எடுத்துக் கொண்டு வருகிறது. அடுத்த சில மணி நேரத்தில், கொலையாளி கைது செய்யப்பட்டிருப்பான் என்று நீங்கள் யூகித்திருந்தால் ரொம்ப கரெக்ட்!" என்று கூறுகிறார் முன்னாள் ஐ. ஜி. பொன். பரமகுரு.

காவல் துறையில், குற்றவாளிகளைக் கண்டுபிடிப்பதில் மிகவும் உதவுகின்றன நாய்கள். நாய்களுடைய அபார சக்தியைக் காவல் துறை பயன்படுத்திக் கொள்வது என்பது மேற்கத்திய நாடுகளில் பல ஆண்டுகளாக இருக்கிற ஒன்றுதான் என்றாலும், இந்தியாவில், முதன் முதலாகக் காவல் துறையில் நாய்கள் படை உருவானது 1952 இல்தான். அதுவும் தமிழ் நாட்டில் தான்!

ஒன்பது நாய்களுடன் ஆரம்பிக்கப்பட்ட தமிழக காவல்துறை துப்பறியும் நாய்கள் பிரிவு, இன்று சுமார் நாற்பது அபாரத் திறமையுள்ள நாய்களைக் கொண்டுள்ளது. அது மட்டுமில்லை; மற்ற மாநிலங்களைச் சேர்ந்த காவல் துறை மற்றும் ராணுவம் ஆகியவற்றின் நாய்கள் பிரிவுகளும் இங்கே வந்துதான் பயிற்சி பெற்றுக் கொண்டு போகின்றன!

சென்னை தவிர, மற்ற சில முக்கியமான நகரங்களிலும் கூட நாய்கள் ஸ்குவாடுகள் உள்ளன. சென்னை எழும்பூரில் உள்ள இப் பிரிவின் சப்–இன்ஸ்பெக்டரான கே. எஸ். ரமணியைச் சந்தித்த போது, உற்சாகமாய்ப் பேசினார்...

"துப்பறியும் நாய்களைத் தேர்ந்தெடுப்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை. பொதுவாக அல்சேஷன், லேபர்டார் — ரெட்ரீவர், கோல்டன்—ரெட்ரீவர், டோபர்மேன் போன்ற ஒரு சில வகை நாய்களே இத்தகைய பணிக்கு ஏற்றவை. ஒரு குட்டியைத் தேர்ந்தெடுக்கும் போது அக் குட்டியின் தாய், தந்தை நாய்களைப் பற்றின விவரங்களைக் கூட அலசிப் பார்த்தே



• சப்–இன்ஸ்பெக்டர் ரமணி





* கடுமையான பயிற்சிகள்...



* நம்பிக்கைக்குரிய நமது போலீஸ் நாய்கள்.

தேர்ந்தெடுப்போம். ஒரே சமயத்தில், பல குட்டிகள் போட்டால், அவற்றுக்குள் சிறந்ததைத் தேர்ந்தெடுத்து, அதையே நாங்கள் வாங்கி வருவோம். கூடவே கால்நடை மருத்துவரையும் அழைத்துக் கொண்டு போய்க் குட்டியின் கால் அமைப்பு, மூக்கு, காது, பார்வை, மார்பு போன்ற பல அம்சங்களையும் ஆராய்ந்து பார்த்தே வாங்குவோம்.''

''நாய்க் குட்டிகளைக் குழந்தைகள் போலவே கவனமாய் வளர்ப்போம்'' என்று கூறுகிறார் சிவலிங்கம். இவர் ஒரு ஹாண்ட்லர். அதாவது, ஒரு நாய்க்கு இவர் தான் முழுப் பொறுப்பாளர். ''நாற்பத்தைந்து நாள் குட்டியிலிருந்து, இந்த ராஜா என் பொறுப்பில்தான் இருக்கிறது. நோய்த் தடுப்பு ஊசிகள், வயிற்றில் பூச்சி வராமல் இருக்க மருந்து, ரேபிஸ் நோய் வராமல் தடுக்க மருந்து என்று குழந்தையைப் போன்றே பலமான கவனிப்பு. மூன்று மாதமானதும், பயிற்சி ஆரம்பமாகி விடும்'' என்கிறார் சிவலிங்கம்.

**நா**ய்களுக்கு இயற்கையிலேயே மோப்ப சக்தி அசாத்தியமானது. விஞ்ஞான ரீதியாய், ஒரு கால்நடை மருத்துவர் அளித்த விளக்கம் இதுதான்:

நமது மூக்கினுள், மயிரிழை போல லட்சக்கணக்கான செல்கள் இருக்கின்றன. இவை வாசனை அறிய உதவும் செல்கள். இவற்றுக்கு 'கெமோரெசெப்டர்ஸ்' (**Chemo-receptors**) என்று பெயர். இவை நரம்புகள் மூலமாய் மூளையுடன் இணைக்கப்பட்டுள்ளன. வாசனை, இந்த செல்களைத் தாக்கும் போது, அவை நரம்புகள் மூலமாய், மூளையை அடைந்து, வாசனையை அனுபவிக்க வைக்கிறது. மூளையில் இந்த நரம்புகள் சென்றடையும் (**olfactory bulb**) என்ற பகுதி எவ்வளவுக்கெவ்வளவு பெரிதாய் இருக்கிறதோ, அவ்வளவுக்கவ்வளவு மோப்பசக்தி அதிகமாக இருக்கும். நாய்களுக்கு ஆல்ஃபாக்டரி பல்ப் பகுதி மிகவும் விசாலமானது என்பதே அவற்றின் அற்புதமான மோப்ப சக்திக்குக் காரணம், மேலும், மனிதனின் நாசியை விட, நாயின் நாசி அதிக ஈரப்பசை உடையது என்பதும் அதன்

அதீத மோப்ப சக்திக்கு இன்னொரு காரணம்!

"ஸ்தலத்தில் குற்றவாளிக்குச் சொந்தமான அல்லது அவன் தொட்டு உபயோகித்த ஏதாவது ஒரு பொருளை, நாயிடம் கொடுத்தால், அதை வைத்து, அந்த ஆளை மிகச் சரியாய்க் கண்டுபிடித்து விடும். அதே சமயம், அந்தக் குற்றத்தோடு சம்பந்தமில்லாத ஒருவரை எந்த ஒரு காரணம் கொண்டும் நாய் பிடிக்கவே பிடிக்காது'' என்று கூறுகிறார் துப்பறியும் நாய்ப் பொறுப்பாளரான சிவலிங்கம்.

''திருவல்லிக்கேணியில், பல குடித்தனங்கள் உள்ள ஒரு வீடு. அதன் சொந்தக்கார அம்மாள் கொலை செய்யப்பட்டு விட்டார். கொலையாளி, தரை, பிரேதம் என்று அனைத்தையும், ஈரத்துணியால் நன்றாய்த் துடைத்து, மிக புத்திசாலித்தனமாய்த் தடயங்களை அழித்து விட்டான். கொலையுண்ட அந்த அம்மாளுடன் அவரது வளர்ப்பு மகனும், மருமகளும் வசித்தனர். எங்களுக்கு அந்த வளர்ப்பு மகன் மேல் சந்தேகம், அவன்தான் கழுத்தை வெட்டிக் கொன்றிருப்பானோ என்று.

ஒரு 'தடயம்' கிடைத்தது. ஒரு பக்கெட்டும், அதன் மேல் தண்ணீர் பிழிந்து எடுக்கப்பட்ட துணியும் இருக்கக் கண்டோம். அந்தத் துணிதான் ஸ்தலத்தில் தெறித்த ரத்தத்தைத் துடைக்கப் பயன்படுத்தப்பட்டிருக்குமோ என்கிற சந்தேகத்தின் பேரில், அந்தத் துணியை நாயிடம் முகர்ந்து பார்க்கச் செய்த போது, நாய் உடனே வீட்டை விட்டு வெளியே ஓடி வந்து, நேராக ஆட்டோ ஸ்டாண்டிற்குப் போனது.

''ஆக, கொலையாளி ஆட்டோவில் ஏறிப் போயிருக்கிறான் என்று தீர்மானித்தோம். அந்த அம்மாளின் மகன் அருகே, சந்தேகத்தின் பேரில் பலமுறை நாயைக் கொண்டு சென்றும், அது அவனைப் பிடிக்கவில்லை. அந்தச் சமயத்தில் அவன் மனைவி அந்தப் பக்கம் வர நாய் திடீரென, அவளைத் தாவிப் பிடித்தது. விசாரித்ததில் அந்த அம்மாளின் மருமகள்தான் குற்றவாளி என்று நிரூபணமாயிற்று.''

நாய்களுக்கான பயிற்சி முறையை விளக்கினார் ரமணி: பயிற்சி ஆணைகள் ஆங்கிலத்தில்தான் தரப்படுகின்றன. குட்டியைக் கயிற்றில் கட்டிப் பிடித்துக் கொண்டு, கூடவே நடந்து வரச் செய்வதுதான் முதல் பயிற்சி. அதன்பின் கயிறு இல்லாமல் நடத்திக் கொண்டு போவது. அடுத்து நில், நட, ஓடு, உட்கார், படு, குரை என்பது போன்ற கட்டளைகளுக்குக் கீழ்ப்படியும் பயிற்சி. இவற்றுடன் கூட, அறிமுகமில்லாதவர்களிடமிருந்து உணவு பெற மறுப்பது, அவர்கள் கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் இருப்பது போன்ற பயிற்சிகளும் தரப்படும்.

நான்காம் மாதத்திலிருந்து மோப்ப சக்திக்கான பயிற்சி துவங்கி விடும். அசைவ சூப் தயாரித்து, அதில் ஓர் எலும்புத் துண்டை ஊறவைத்து அதைப் பயிற்சி நாய்க்கு முகர்ந்து பார்க்கக் கொடுப்போம். பிறகு அந்த எலும்புத் துண்டைச் சிறிது தூரத்தில் போட்டு வைப்போம். குறிப்பிட்ட முதல் இடத்திலிருந்து எலும்புத் துண்டு உள்ள இடம் வரை வழிநெடுகக் கொஞ்சம் சூப் தெளித்து வைப்போம். நாயை நாங்களே பிடித்துக் கொண்டு – முகரச் செய்து– எலும்புத் துண்டு வரை அழைத்துக் கொண்டு போவோம். இப்படிச் சில தடவை செய்ததும், நாய் தானாகவே மோப்பம் பிடித்துக் கொண்டு போய் எலும்பைக் கண்டுபிடிக்கப் பயின்று விடும்.

பின்னர், எலும்புத் துண்டைத் தொலைவில் வைப்போம். அதையும் மோப்ப சக்தியால் கண்டுபிடிக்கப் பழகினதும், எலும்புத் துண்டைப் புதைத்து வைப்போம். பின்னர், போலீஸ்காரரையே குற்றவாளி போலாக்கி, ஒரு குறிப்பிட்ட பாதையில், போகச் செய்து, அவருடைய பொருள் எதையாவது, நாய்க்குக் காட்டி, மோப்பம் பிடிக்கச் செய்து அந்தப் பாதையில் ஓடி, அவரைக் கண்டுபிடிக்கப் பயிற்சியளிப்போம். நாய் தடுமாறும் போது, சரியான பாதையில் போக உதவி செய்வோம். இதில் தேறியவுடன், நாய் தானாகவே தனது மோப்ப சக்தியால் கண்டுபிடிக்கிறதா என்று பார்ப்போம். பயிற்சி மிகக் கடுமையானது. பழகிய நாய்களை, குற்றம் நடந்த இடங்களுக்குக் கொண்டு போகும்போது, பயிற்சி நாய்களையும் கூடவே அழைத்துக் கொண்டு போய்ச் சரியாகக் கண்டுபிடிக்கிறதா என்று சோதித்துப் பார்ப்போம்.''

இவற்றுக்குத் தினமும் என்ன உணவு? ''காலையில் அரை லிட்டர் பால், வைட்டமின் மாத்திரைகள், டானிக், நண்பகலில் அரை கிலோ இறைச்சி மற்றும் சாதம். மாலையில் பிரெட், பால். தவிர வாரத்தில் மூன்று நாட்கள் போல, ஆட்டு ஈரல். குட்டி நாய்கள் என்றால் தினம் ஐந்து முறை சாப்பிடும்!'' என்கிறார் நாய்ப் பொறுப்பாளர் பக்கிரிசாமி.

அனைத்திந்திய அளவில், நம் தமிழக காவல் துறையின் நாய்கள் வாங்கியுள்ள பரிசுகள், மெடல்கள், கோப்பைகள் போன்றவை சுமார் ஆயிரத்து ஐந்நூறுக்கும் மேல் இருக்கும்.

என்றாலும் சில குற்றவாளிகள், 'போலீஸ் நாய்களிடமிருந்து தப்புவது எப்படி?' என்று ஆய்வுக் கட்டுரை எழுதி டாக்டர் பட்டம் பெறக்கூடிய அளவுக்குக் கில்லாடிகளாக இருக்கிறார்கள் என்பதும் உண்மையே!

**— எஸ். சந்திரமௌலி**

அட்டை வண்ணப்படமும் மற்ற படங்களும்: **ரமணன்**

வீசி மகிழ ஒரு புதிய விளையாட்டு...

# ஃப்ரிஸ்பீ

**இலவசம்**

ஃப்ரிஸ்பீ!
ஒவ்வொரு 500 கிராம்
சாக்கலேட் காம்ப்ளான்
டின்னுடனும்.

**காம்ப்ளான்®**
திட்டமிட்ட பரிபூரண உணவு




இப்போது உங்கள்
குழந்தைகளுக்கு
ஊட்டத்துடன்
உற்சாகத்தையும்
சேர்த்து அளிப்பீர்.
காம்ப்ளான் பறக்கும்
ஃப்ரிஸ்பீயை அவர்கள் வீசி
விளையாடி மகிழக் காண்பீர்.

தற்போது, தேர்ந்தெடுத்த
சில இடங்களில் மட்டுமே கிடைக்கும்.




உங்களது கடுமையான உழைப்புக்கும், மூளையின் வேலைக்கும் செறிவான ஊட்டமும் வலிமையுமே அடிப்படை. வெறும் நெல்லிக்காய் லேகியங்களும், சாதாரண டானிக்குகளும் இவற்றை நிறைவாகத் தரமுடியாது.

ஒப்பற்ற சக்தியைத் தினந்தோறும் உங்களுக்கு அளிக்கக் கூடிய அரிய மூலிகை டானிக் கிரௌன் காய கல்பம். இது பல்லாண்டு ஆராய்ச்சிக்குப் பின், சித்த வைத்திய முறையில் தயாரிக்கப்படும் சிறந்த மூலிகை டானிக்.

**கிரௌன் காயகல்பம் ரெகுலர்:**
கவனமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட கல்ப மூலிகைகளான வல்லாரை, தூதுவளை, கரிசலாங்கண்ணி, பொற்சீந்தில், கடுக்காய், தான்றிக்காய், அஸ்வகந்தா, நெல்லிக்கனி ஆகியவற்றுடன் சுத்தமான தேன் மற்றும் முறையாகப் பாடம் செய்யப்பட்ட செந்தூரம், துத்தநாக பஸ்பங்களும் சேர்த்து இயற்கை முறையில் விசேஷமாகத் தயாரிக்கப் படுகிறது.

இது இரத்தத்தைச் சுத்தமாக்கி, உணவு எளிதில் ஜீரணம் ஆகவும், ஊட்டச் சத்துக்கள் இரத்தத்தில் சேரவும் உதவுகிறது. குடலைச் சுத்தம் செய்து வாயுக்கோளாறுகளை நிவர்த்தி செய்கிறது.

பெண்களுக்கும் குழந்தைகளுக்கும் நிறைய சக்தியும் ஊட்டமும் அளிக்க இரும்புச்சத்து நிறைந்தது.

**கிரௌன் காயகல்பம் ஸ்பெஷல்:**
கல்ப மூலிகைகள், தேன் ஆகியவற்றுடன் விசேஷ முறையில் பாடம் செய்யப்பட்ட தங்க பஸ்பம், வெள்ளி பஸ்பம், செந்தூரம், துத்த நாகம் உட்பட நவலோக பஸ்பங்கள் யாவும் சேர்க்கப்பட்டுள்ளன.

இதில் பல இயற்கை வைட்டமின்களும், தாது உப்புகளும் நிறைந்திருப்பதால் அதிகப்படியான வலிமையும் சுறுசுறுப்பும் எப்போதும் உங்களிடம் நிறைந்திருக்கும்.

| ரெகுலர் | ஸ்பெஷல் |
|---|---|
| *இரும்புச்சத்து நிறைந்தது* | *தங்க பஸ்பம் அடங்கியது* |
| *160 கி: ரூ. 18* | *150 கி: ரூ. 35* |
| *500 கி: ரூ. 54* | *500 கி: ரூ. 105* |
| *(வரிகள் உட்பட)* | *(வரிகள் உட்பட)* |







**கிரௌன் காயகல்பம்**

ஓயாமல் உழைத்திட ஒப்பற்ற சக்தி.

தயாரிப்பாளர்:
கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ், சென்னை-2.

Insight 739

# புள்ளிகள்: செய்திகள்


ஹாட்லி

## உலக சாதனை: 400 வது விக்கெட்!

உலக கிரிக்கெட் சரித்திரத்தில், ஒரு புதிய சாதனை படைத்தார் நியூஸிலாந்து வீரர் ரிச்சர்ட் ஹாட்லி. பார்வையாளர்கள் அத்தனை பேரும் வெகு நேரத்துக்கு எழுந்து நின்று கைதட்டினார்கள் — அது ஹாட்லியின் 400 — வது விக்கெட்.

இதுவரை உலக சாதனையாகக் கருதப்பட்டு வந்த இயான் பாதம்மின் 373 விக்கெட்டுகளைத் தாண்டினார் ஹாட்லி.

பவுண்டரி லைனில் மலர்க் கொத்துக்களைக் கொடுத்து வாழ்த்திய இரண்டு இளம்பெண்களின் கன்னத்தில், நன்றியுடன் சம்பிரதாயமாக முத்தமிட்டார் ஹாட்லி. சில நிமிடங்களுக்கு டீம் நண்பர்கள் அவருடன் சேர்ந்து நின்று, அந்த மறக்க முடியாத நேரத்தின் சந்தோஷத்தைப் பகிர்ந்து கொண்டனர்.

ரிச்சர்ட் ஹாட்லியின் நானூறு விக்கெட்டுகளில் அதிகபட்சமாக 123 ஆஸ்திரேலிய வீரர்கள் விழுந்திருக்கின்றனர்; என்றாலும், இந்தியாவுக்கு எதிராக இவர் விளையாடிய போது கிடைத்த 57 விக்கெட்டுகளில், 23 ரன்களே கொடுத்து ஏழு விக்கெட்டுகளை வீழ்த்தியதுதான் 'பௌலிங் பெஸ்ட்' என்கிறார் 'இந்து' கிரிக்கெட் புள்ளிவிவர நிபுணர்.

''இந்தச் சாதனைகளையும் முறியடிப்பவர்கள் இன்னும் வரக்கூடும். ஆனால் முதல் முதலாக எவரெஸ்ட் உச்சியைத் தொட்டவன் என்பதுபோன்ற உணர்வு எனக்குள் எழுந்தது உண்மை'' — என்றார் ஹாட்லி.

இவர் 'பாட்டிங்'கிலும் சூரர்தான்; 151 நாட் அவுட் இவரது அதிகபட்ச ரன்கள்.

எப்படிப் பந்து வீசினால், ஆட்டக்காரர் மிகுந்த டென்ஷனுடன் ஆடி, சீக்கிரம் அவுட் ஆகிப் போவார் என்கிற டெக்னிக்கை நன்கு அறிந்தவர் ஹாட்லி. மண்டையைப் பதம் பார்க்கும் பௌன்ஸர் வீசத் தயங்க மாட்டார். சினேக உணர்வு மிகுந்தவர்தான். அதே சமயம் மைதானத்தில் சட்டென உணர்ச்சிவசப்பட்டு விடுவார். பென்சன் அண்டு ஹெட்ஜஸ் உலகக் கோப்பைப் பந்தயத்தின் போது, பவுண்டரிக் கோட்டை நோக்கி ஓடிக் கொண்டிருந்த பந்தைத் தடுக்கப் போய்க் கொண்டிருந்த ஹாட்லியை, தடுப்பு வேலியைத் தாண்டி ஓடிவந்த ஒரு பார்வையாளர் தடுத்துவிட, ஹாட்லிக்கு வந்ததே கோபம். அந்த ஆளை அப்படியே குண்டுக் கட்டாய்த் தூக்கி, வேலிக்கு அந்தப்புறம் எறிந்துவிட்டார்!

ஹாட்லியின் மனைவி நியூஜிலாந்தின் பெண்கள் கிரிக்கெட் அணியில் இடம் பெற்றிருக்கிறார். ஹாட்லியின் அப்பா நியூசிலாந்து கிரிக்கெட் கவுன்சிலின் தலைவர். ஹாட்லியின் இரண்டு சகோதரர்களும் கிரிக்கெட் ஆட்டக்காரர்கள்தான்!

## விருதை மறுத்தவர்!

தமக்குக் கொடுக்கப்பட்ட பத்மபூஷண் விருதை ஏற்றுக் கொள்ளாதது மட்டுமின்றி, ''இத்தகைய விருதுகள் பத்திரிகையாளர்களுக்குத் தரப்படுவதே தவறு'' என்று சாடியிருக்கும் நிகில் சக்கரவர்த்திக்கு வயது 77. கல்கத்தா பிரெஸிடென்ஸி கல்லூரியில் சரித்திரம் படித்தவர்; ஆக்ஸ்போர்டில் படிக்கும் போதுதான் கம்யூனிசவாதிகளுடன் தொடர்பு ஏற்பட்டது.

42 — இல் முழுநேர கம்யூனிஸ்ட் ஊழியரான நிகில் சக்கரவர்த்தி, 43 — இல் பத்திரிகைத் துறையில் நுழைந்தார். இந்தியத் தலைவர்களைக் கொல்ல, பிரிட்டிஷார் தீட்டிய 'ஆபரேஷன் அசைலம்' என்கிற திட்டத்தை இவர் அம்பலப்படுத்திவிட்டுத் தலைமறைவானார்.

நேருவின் உதவியாளரான எம்.ஓ.மத்தாய் பற்றி இவர் எழுதிய கட்டுரை, பெரும் பரபரப்பை ஏற்படுத்தி மத்தாயின் ராஜினாமாவில் முடிந்தது.

மெயின் ஸ்டிரீம் பத்திரிகையை 62 — இல் தொடங்கி, இன்றுவரை நடத்தி வருகிறார்.

இவருடைய மனைவி ரேணுவும் முழுநேர கம்யூனிஸ்ட் ஊழியர்.

— ஜூலி; எஸ். வி.

கார்ட்டூன்: சண்டே மெயில்.


நிகில் சக்கரவர்த்தி

ரயிலு ஓடறதைப் பத்தி
அப்புறம் பார்க்கலாம்...
முதல்ல இந்தப்
பேரை மாத்துங்க!

முடியாது...
உன்னால் ஆனதைப்
பார்த்துக்கோ!

வாழப்பாடி

கருணாநிதி

மறைமலை
நகர்

வேலையில்லாத்
திண்டாட்டம்

கல்வி
அறிவின்மை

விலைவாசி
உயர்வு

பெனசீர்

பாக். யுத்த
வெறியர்கள்

அத்துமீறல்

இந்தியா

ஒரே அடி,
சிக்ஸர்தான்!

பழிவாங்கும்
உணர்வு

கிரிக்கெட்
போர்டு

வெங்சர்க்கார்
விளையாட
அனுமதி



# கல்கி

1990 பிப்ரவரி 18
மலர் 48 இதழ் 29
சுக்ல மாசி 6



## போதும் போதும், போராட்டங்கள்!

சுவீடன் தேசத்தில் இரண்டு ஊர்களுக்கு ஒரே பெயர் இருந்தது. "டார்னா" என்ற பெயருக்கு இரண்டு ஊர்க்காரர்களுமே சொந்தம் கொண்டாடினார்கள். பெயர்க் குழப்பத்தினால் பல தொல்லைகள் ஏற்படுவதைச் சுட்டிக்காட்டிய அரசு, பிரச்னைக்குத் தீர்வு காணுமாறு இரு ஊர்க்காரர்களையுமே கேட்டுக் கொண்டது. அவர்கள் கூடிப் பேசி ஒரு முடிவுக்கு வந்து, கயிறு இழுப்புப் போட்டி நடத்தினார்கள்! வெற்றிபெற்ற ஊர்க்காரர்கள் ஊர்ப் பெயரை நிலைநிறுத்திக் கொண்டார்கள். தோல்வியடைந்தவர்கள் தங்கள் ஊருக்குப் புதுப்பெயர் சூட்டி, அதை விழா எடுத்துக் கொண்டாடி மகிழ்ந்தார்கள்!

இதேபோல் தி. மு. கழகமும், காங்கிரஸ் கட்சியும் மறைமலை நகரிலேயே ஒரு கயிறு இழுப்புப் போட்டி நடத்தி, ஸ்டேஷனுக்குப் பெயர் சூட்டும் பிரச்னையைச் சுலபமாகத் தீர்த்துக் கொள்ளலாம். ஆனால் இதுபோன்ற எளிய தீர்வுகளுக்கு இருதரப்பினருமே உடன்பட மாட்டார்கள்! ஒன்றுமில்லாத விஷயத்துக்குத் தேவையற்ற ஆர்ப்பாட்டங்களை நடத்தி, போராட்டங்களை அறிவித்து, அற்பத்தனமான அரசியல் ஆதாயங்களுக்கே முயற்சி செய்வார்கள்! மறைமலை நகர் ஸ்டேஷன் என்றால் என்ன, காமராஜர் ஸ்டேஷன் என்றால் என்ன? நாடெங்கிலும் லட்சக்கணக்கான ரயில் பயணிகளுடைய பிரச்னைகள் மறைந்துவிடப் போகின்றனவா? மீனம்பாக்கம் விமான நிலையத்தை என்ன பெயரிட்டு, எப்படி அழைத்தால் என்ன? விமானப் பயணிகளின் மூட்டை மூட்டையான குறைகள் தீர்ந்துவிடப் போகின்றனவா?

இன்றைக்கு நாட்டிலே மிகப் பெரிய பிரச்னைகள் பூதாகார வடிவெடுத்துப் பயமுறுத்திக் கொண்டிருக்கின்றன. ஏழைமை, கல்வி அறிவின்மை, ஜனத்தொகைப் பெருக்கம், விலைவாசி உயர்வு, வேலையில்லாத் திண்டாட்டம் என்று பட்டியல் போட்டால் பக்கமெல்லாம் நிரம்பும். இவற்றையெல்லாம் சமாளிக்கத் திராணியற்ற ஆளும் கட்சிகளும், இவற்றைத் தீர்க்க உருப்படியான யோசனைகளைக் கூறத் தெரியாத எதிர்க்கட்சிகளும் மூடப்பிடிவாதங்களை விடாமல், வெற்றுக் கோஷங்களை எழுப்பிக் கொண்டு, உண்ணாவிரதம், போராட்டம் என்று மக்களின் கவனத்தைத் திசை திருப்பிக் கொண்டிருக்கின்றன. எவ்வளவு கேவலம் இது?

சிவாஜி கணேசனை மதிக்காவிட்டால் போங்கள் ஐயா, ஆனால், ஜனதா தளத் தொண்டர்கள் தங்கள் மாநிலத் தலைவருக்கு உரிய மரியாதை தர வேண்டாமா? வேண்டாம் எனில், விருந்தினராக வந்த கருணாநிதியிடம் பண்புடன் நடந்து கொள்ள வேண்டாமா? அதுவும் வேண்டாம் எனில், தமிழக முதல்வர் என்பதற்காகவாவது கொஞ்சம் மரியாதை காட்டக் கூடாதா? அதற்கும் இஷ்டம் இல்லை எனில், உங்கள் அகில இந்தியத் தலைவரை, பாரதப் பிரதமரைக் கூடவா மதிக்காமல் நடந்து கொள்வது? அவர் எவ்வளவு பெருந்தன்மை காட்டிக் கருணாநிதியை அழைத்து வந்தார்? அவருக்குத் தலைகுனிவை ஏற்படுத்தி, மனம் புண்படச் செய்யலாமா? உங்களைத் தலையாட்டிப் பொம்மைகளாக யாரும் இருக்கச் சொல்லவில்லை. உங்கள் கருத்தை வெளியிடுங்கள். ஆனால் அதைச் செய்ய வேண்டிய தருணத்தில், செய்ய வேண்டிய முறைப்படி செய்வீர்கள் என்று மக்கள் எதிர்பார்க்கும் போது அவர்களுக்கு ஏமாற்றம் அளிக்க வேண்டுமா?

நடந்தது நடந்துவிட்டது! அதன் பிறகு, ஆர்ப்பாட்டம் செய்த ஜனதாதளத் தொண்டர்களைக் கைது செய்வதும், தில்லியிலே விஷயம் அறிய வந்து அவர்களை விடுதலை செய்யுமாறு உத்தரவு பிறப்பிப்பதுமான நாடகங்கள் எதற்கு?

வேண்டாம், ஐயா வேண்டாம்! ஜனநாயகம் என்பது இதுவல்ல. எதிர்ப்பது என்பது விரோதத்தை வளர்ப்பதல்ல. ஆளும் கட்சிகளும், எதிர்க்கட்சிகளும் கண்ணாமூச்சி விளையாடிக் கொண்டிருந்தால் பிரச்னைகள் தீரவே செய்யாது. இங்கே தீர்க்கப்படுவதற்கான அடிப்படைப் பிரச்னைகள் கதறி அழுது கொண்டிருக்கின்றன. இந்நிலையில் புதிய பிரச்னைகளைத் தோற்றுவிக்காதீர்கள்! அது ஜனநாயக விரோதச் செயலாகும். ஆக்கபூர்வமான யோசனைகள், விட்டுக் கொடுக்கும் பரந்த மனப்பான்மை இவை எல்லாத் தரப்பிலும் சிறந்தோங்கட்டும். தயவுசெய்து நாடு செழிக்க அனுமதியுங்கள்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



"உங்க டைரில, "வேண்டா வெறுப்புடன் சந்தசாமி"ன்னு எழுதி, கையெழுத்துப் போட்டிருக்காரே, யாரது...?"

"இந்த டைரியை என்கிட்டே 'பறி' கொடுத்த சந்தசாமிதான்...!"

— சுரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.



"எதுக்குத்தான் தவணை முறைன்னு ஒரு வகை தொகையே இல்லாம போச்சு!"

"ஏன் இப்படிச் சொல்றே?"

"மாமூலை மூணு தவணைல தரட்டுமான்னு கேட்கிறான்!"

— ராதா வாசுதேவன்.



"அந்த டைரக்டர் ரொம்பக் கடிக்கிறாரா, எப்படி...?"

"ஒருகாட்சியை 'குளோசப்' பில்எடுக்கலாமான்னு கேட்டதுக்கு, 'ஏன் கோல்கேட்'ல எடுக்கக் கூடாதுங்கிறாரு...!"

— ஏ. ஆர். வீரராகவன்.



தளபதி: 'போரில் வெற்றி பெற்றால் மட்டும் போதாது; எதிரி நாட்டுப் படைக் கருவிகளையும் கைப்பற்றுங்கள்' என்கிறாரே அரசர், ஏன்?

அமைச்சர்: பழைய இரும்புக் கடையில் போட்டுப் போர்ச் செலவைச் சரிக்கட்டலாம்னுதான்!

— திருத்துறைப்பூண்டி எஸ். சந்தசாமி



"இங்கே பக்கத்திலே ஒரு எஸ். ஐ. குடியிருந்தாரே, இப்ப இல்லையா?"

இந்த ஏரியாவிலே திருட்டுப் பயம் அதிகமாயிடுச்சுன்னு போன வாரம்தான் வீட்டைக் காலி பண்ணிட்டு வேற பக்கம் குடிபோயிட்டாரு!"

— பழனி கல்யாணம்.



## சிறுசேமிப்புத்துறை

# சேமிப்பின் மூலம் பிரமிக்கத்தக்க பரிசுகள்!

**சிறுசேமிப்பில் முதலீடு—வருமானவரியிலிருந்து பாதுகாப்பு!**

குறிப்பிட்ட அளவு பரிசுக்கூப்பன்கள் உள்ளன.

**பரிசுப் பொருட்களின் விவரம்:**

| | |
|---|---|
| 1 சூப்பர் பம்பர் பரிசு | - காண்டஸா கார் |
| 1 முதல் பரிசு | - மாருதி கார் |
| 5 இரண்டாவது பரிசுகள் | - ஹீரோ ஹோண்டா மோட்டார் சைக்கிள் |
| 10 மூன்றாவது பரிசுகள் | - கலர் டிவி |
| 20 நான்காவது பரிசுகள் | - 165 லிட்டர் ரெப்ரிஜிரேட்டர் |
| 100 ஐந்தாவது பரிசுகள் | - 7½ லிட்டர் பிரஷர் குக்கர் |
| 500 ஆறுதல் பரிசுகள் | - குவார்ட்ஸ் சுவர் கடிகாரம் |

- தேசிய சேமிப்பு பத்திரம் 8வது வெளியீடு
- தேசிய சேமிப்பு திட்டக் கணக்கு-1987
- பொது சேமநலநிதி
- இந்திரா சேமிப்பு பத்திரம்
- விவசாயிகள் சேமிப்பு பத்திரம்
- மாதாந்திர வருமானத் திட்டம்
- அஞ்சலக குறித்தகால முதலீடு

மேற்கண்ட சிறுசேமிப்புத் திட்டங்களில் ரூ.1000/- முதலீடு செய்வதன் மூலம் கிடைக்கும் வட்டியுடன் இலவச பரிசுக் கூப்பனை பெற்றிடுங்கள். இத்திட்டத்தில் எல்லா தனிநபர்களும் முதலீடு செய்யலாம்.

**தேசிய சேமிப்பு திட்டக்கணக்கு-87ல் ரூ.30,000/- வரை முதலீடு செய்து**




# வருமான வரி விலக்கு பெறலாம்.

வருமான வரிச்சட்டம் 80CCA பிரிவின் கீழ் முதலீட்டிற்கு 100% வரிச்சலுகை. இந்த வரிச்சலுகை 80C பிரிவின் கீழ் கிடைக்கும் வரிச்சலுகையுடன் சேர்த்தும் பெறலாம்.

**இயக்குநர், சிறுசேமிப்புத்துறை**
143, அண்ணா சாலை, சென்னை-600 002.
தொலைபேசி: 840223/846209/840003.

அணுகவும்:
- அனைத்து அஞ்சலகங்கள்
- ஆட்சியர் அலுவலகங்கள்
- வட்டாட்சியர் அலுவலகங்கள்
- ஊரக வளர்ச்சித்துறை அலுவலகங்கள்.

DIPR/199/MS/90/ARIES





# புலன் விசாரணை

‘ஏய் லுக், இது என் சொந்தப் படம். நீங்கள் அத்தனை பேரும் எனக்கு அடங்கித் தான் நடக்கணும்’ என்பது போன்ற ஓர் அதிகாரமிடுக்கு விஜயகாந்தின் ஒவ்வோர் அசைவிலும் தூக்கல். இருந்தாலும் தன் மகளுக்குச் செய்யும் பணிவிடைகளில் வழியும் குழைவில்; ராதாரவியின் அட்டகாசப் பதவி அதிகாரத்துக்குக் கட்டுப்பட்டு உள்வாங்கும் சங்கட அடக்கத்தில்; புலன் விசாரணையின் போது வைஷ்ணவி, ‘என் புருஷனைப் பத்தி நான் எதுவும் சொல்ல முடியாது. நீங்க எந்த நடவடிக்கையும் எடுக்க மாட்டீங்க,’ என்று எடுத்தெறிந்து பேசி விரட்டும்போது கூசிக் குறுகித் திரும்பும் பரிதவிப்பில் மனிதராய்த் தெரிகிறார். மற்றபடி பெரும்பாலும் மெஷின் கன் அவதாரம்தான்.

‘பேசப் போறேன், கவனியுங்க,’ என்கிற மாதிரி ஒரு செருமல் கட்டியத்துடன் தனது மந்திரி வேடத்து முகத்திரையைப் பீஸ் பீஸாய்க் கிழித்துப் போடுகிறார் ராதாரவி. ‘ஜனங்களோட குறையைத் தீர்க்கப் போறதாச் சொல்லி அவங்களை நம்ப வைக்கணும். அப்படிப் பேசிக்கிட்டே இருக்கணும். ஆனா குறையைத் தீர்த்துடக் கூடாது.’ என்று தன்னிலை விளக்கம் சொல்லுவது தந்தையார் பாணி.

அசல் வில்லன் ஆனந்தராஜ்தான். ஆர்டினரி ஆட்டோ டிரைவர் அமைச்சரையே ஆட்டிப் படைக்கும் அளவுக்குத் தன் அந்தஸ்தை எப்படி உயர்த்திக் கொள்வது என்பதைப் படு ‘பச்சை’யாகக் காட்டியிருக்கிறார்.

தூய்மை விரும்பிகள் உச்சி மேல் வைத்து மெச்சித் துதிபாடும் அளவுக்குக் குருசாமி நம்பியார் கும்மென்று உயர்ந்து விட்டது ஆச்சரியம். ஆட்சிக்கு வருகிறவர்களின் அடியாட்களாகத்தான் போலீசார் செயல்பட முடிகிறது என்பதை விளக்கும் வசனங்கள் உட்பட என்றால், அதற்கு உயிர்த் துடிப்பு ஏற்றத்தக்க குரல்வாகு, முகபாவம் இந்தப் பெரியவருக்கு.

பெண்கள் வரிசையில் வைஷ்ணவி தன் சோக முகத்துக்கு வாகான பாத்திரத்தை ஏந்திக் கொண்டு சற்றே சிலிர்ப்புக் காட்டியிருக்கிறார். கோர்ட்டாரையே ஜவாப் சொல்லத் தடுமாற வைக்கும் கேள்விகளைக் கேட்பது சற்று அதிகமாய் இருந்தாலும் சுவை.

ரூபிணி ஓர் எதிர்பார்ப்பை உணர்த்தி, கொஞ்சம் போல் கிளுகிளுப்பூட்டி விட்டு ஒளிந்து விடுகிறார்.

இடைவேளைக்குப் பிறகு பம்பாய் மருத்துவமனையும் அந்த ஆர்ப்பாட்ட அமர்க்களங்களும் அகலத் திரைக்கே அர்த்தம் கற்பிக்கும் காமெரா வியூகங்கள். மனித உடலின் உதிரிபாகத் தயாரிப்புக் கூடம் இயங்கும் விதத்தைக் காட்டிய ஹாலிவுட் ‘சோமா’வை இத்தனை அற்புதமாய் ஒற்றியெடுத்திருப்பதை விசேஷமாகப் பாராட்டத்தான் வேண்டும். பிரும்மாண்டமான தயாரிப்பு!

அசல் கார் ஷெட்டைப் போலீசார் புல்டோசர் வைத்துப் பெயர்த்தெடுக்கும் ஆர்ப்பாட்டம்; ஆங்காங்கே சுவரிலே, பூமிக்கடியிலே புதையுண்ட எலும்புக் கூடுகள் பிதுங்கும் பயங்கரம் உறைய வைக்கிறது.

ஆக்ஷன், காமெரா தவிர இந்தப் படத்தில் சுறுசுறுவென்று இருக்கும் இன்னொன்று: வசனம்.

— பி. எஸ். எஸ்.

# நீங்கள் சௌத் இந்தியன் பாங்கைப் பொறுத்தவரை கூட்டத்தில் ஒருவரல்ல

ஆம்; சௌத் இந்தியன் பாங்கு உங்களுக்கு நல்குவது தனிப்பட்டதொரு சேவை. வஜ்ர நிதி, கல்பக நிதி, ஜுபிளி காஷ் சர்ட்டிபிகேட், வீடு கட்ட கடன் — இவை இதன் பிரத்தியேகத் திட்டங்கள். இன்று இது ''மக்கள் பாங்கு'' என்று அறியப்படுமானால்



இது அனைவரிடமும் செலுத்தும் அக்கறைதான் காரணம். ஒவ்வொருவரிடமும், உங்களிடமும்.




Regd. Office : Trichur

# மணல்வெளி மான்கள்

## 6

சைக்கிளில் மாசிலா மௌனமாக உட்கார்ந்து வந்தான். தாம்போகியில் பாதித் தூரம் கடக்கிற வரை கூட, அவன் ஒன்றும் பேசவில்லை.

அந்த மௌனம், கௌதமை என்னவோ செய்தது. அவனாகப் பேச்சுக் கொடுத்தான்.

''அன்னவாசல்லே எங்கே போகணும்? ஊருக்குள்ளேயா?''

''இல்லே.''

''பின்னே, ரோடு ஓரமாவா?''

''ஆமா.''

எதிரே ஸ்டேஷனிலிருந்து, விட்டலாபுரம் வழியே போகிற பஸ் வந்தது. ஓரமாக ஒதுங்கினான். பஸ்ஸின் இரைச்சல் அடங்கிய பிறகு, ''காலை ஆதிகேசவன்கிட்டே என்னமோ தகராறு போல,'' என்று மீண்



டும் பேச்சுக் கொடுத்தான்.

"ஆமா. ஒருத்தரை நம்பிப் பணம் குடுத்தான். பணத்தை வாங்கினவன் ஓடிட்டான். நான் ஜாமீன் நின்னேன். என்னைக் கேட்டான். வார்த்தை வித்தியாசமா வளர்ந்துட்டுது."

"நீ கை நீட்டி அடிச்சுட்ட மாதிரி பேசிக்கிட்டாங்களே."

"ஆமா." நேர்மையாக ஒப்புக் கொண்டான்.

கௌதம் மேலே வளர்க்கவில்லை. அவனுக்கே கூச்சமாகி விட்டது.

எல்லாம் தெரிந்தும் தெரியாத மாதிரி பேச்சுக் கொடுத்து, வாயைக் கிளறும் கிராமியப் பண்பில், கௌதமுக்கு அதிகப் பரிச்சயமில்லை. துருவித் துருவிக் கேட்க வேண்டிய நபரும் இவனல்ல.

மாசிலா ஆழமான அடிகள் வாங்கியவன். கொட்டிப் புலம்புகிறவன் அல்ல. அவன் துயர்கள் வலிமையானவை. மதிக்கப்பட வேண்டியவை. அது உறைத்த போது கௌதம் வெட்கமுற்றான்.

சைக்கிள் இன்னும் கொஞ்ச தூரம் போனதும் பின்னாலிருந்து மாசிலாவே பேசினான்.

"எல்லாம் என் நேரம் தம்பி!"

வார்த்தைகள் கமறிக் கொண்டு வந்த மாதிரி தோன்றியது.

"ம்ம்ம்ம்" என்று பதிலுக்கு ஏதோ சொல்ல வேண்டியது அவசியம் என்று படவே, கௌதம் ஓசை தந்தான்.

"ஆதி நல்லவன்தான்! அவன் நேரம்."

"..............."

"ரெண்டு பேரும் ஒண்ணாப் பழகி இருக்கோம். அவனுக்காக நான் எவ்வளவோ கஷ்டப்பட்டிருக்கேன். எனக்காக அவனும் எவ்வளவோ பட்டிருப்பான்."

கௌதமுக்குப் பேசாமல் கேட்கத் தோன்றியது.

"சைக்கிள்ளே டபிள்ஸ் ஒண்ணா எத்தினியோ நாள் சினிமாவுக்குப் போயிருக்கோம். விடியக் காத்தால மட்டும் கரண்ட் இருக்கறப்ப, தண்ணி பாய்ச்ச எத்தனையோ நாள் எழுப்பி இருக்கான்... ம்ம்ம்... இன்னும் எவ்வளவோ...."

"அவ்வளவு பழகிட்டு," என்று முடிக்காமல் நிறுத்தினான் கௌதம்.

"அதான் சொல்றேனே... எல்லாம் நேரம் சார். நெலத்தைத் தொளசிங்கம் வாங்கப் போறான்னு பேச்சு அடிபட்டப்பவே, எங்க நெலத்துச் சொந்தக்காரரைப் போயிப் பாருன்னு இவனே ஐடியா கொடுத்தான்."

"பார்த்தியா?"

"பாத்தேன். அவனுக்கு விக்க வேண்டாம்னா நீ வாங்கிக்கிறியா சொல்லுன்னு கேட்டாரு. நான் என்ன பதில் சொல்லுவேன்?"

"என்ன வெலை சொன்னாரு?"

"ஏக்கர் லட்ச ரூபா. பத்தாயிர ரூபா வாங்கித் தர்றேன். நெலத்தைக் காலி பண்ணிட்டுப் போயிடுன்னு சொன்னாரு. அதையும் ஆதிகிட்டே சொன்னனே!"

"என்ன சொன்னான் அதுக்கு?"

"போக வேணாம் இரு. வக்கீலைக் கலந்து பேசுவோம்னு சொன்னான். அந்த தொளசிங்கம் அடிக்கடி மோட்டார் சைக்கிள்ளே வீட்டுப் பக்கம் வந்து போறான். உஷாரா இருன்னான். மொதல்ல எனக்குப் புரியலே.

பேச்சு மிக நுட்பமான இடத்திற்கு ஓர் ஆண் இன்னோர் ஆணிடம் பேச இயலாத அபாயகரமான நெருக்கத்துக்கு வருவதை கௌதம் உணர்ந்தான். கேட்கப் பிடிக்கவில்லை. தவிர்க்கவும் முடியவில்லை.

"ஒரு சமயம் தொளசிங்கத்துக்கிட்டே என் நெலத்து மேலே வண்டி ஓட்டிக்கிட்டு வராதீங்கன்னு. வேற சாக்கில சப்தம் போட்டிருக்கான்."

மாசிலா மேலே பேசவில்லை. அது வேண்டாம். நிறுத்தி விடு, மாசிலா நிறுத்தி விடு. கௌதம் மனசுக்குள் இறைஞ்சினான்.

"ம்ம்ம். எங்கியோ வட்டிக்குக் கடன் வாங்கிப் பணம் குடுத்திருக்கான். அது ரொம்ப நெருக்கடி போயிருக்கு. அதான் தடுமாறிட்டான்."

பேச்சு தானாகத் திசை மாறி விட்டது கௌதமுக்கு நிம்மதி.

"மனுசன் தாழ்ந்துட்டா கேக்கற சொல் எல்லாம் விகல்பமாயிடுது. சினேகிதம் கூட விரோதமாத் தோணிடுது. எங்கிட்டே பணம் இருந்தா அப்பவே பைசல் பண்ணியிருப்பேன்."

சைக்கிள் அன்னவாசலை மிதித்தது. மெல்லக் கடந்தது. ஊர்க்கோடி வந்தது.

"அதோ கரும்பாலை கட்டியிருக்கே, அங்கே நிறுத்துங்க தம்பி, எறங்கிக்கறேன்."

கரும்பாலையிலிருந்து வெல்லப்பாகின் வாசனை தூரத்திலேயே தூக்கிற்று.

"யாருது ஆலை?" கௌதம் கேட்டான்.

"பழைய மணியக்காரர் கரும்புதான் ஓடிட்டிருக்கு. கூலிக்குப் போயிட்டிருக்கேன்."

"கூலிக்கா?"

"வெல்லப்பாகைப் பதமா உருண்டை பிடிக்கணும். கொஞ்சம் நுணுக்கமான வேலை. எப்பவும் நாந்தான் போவேன்."

ஆலையோரத்தில் கௌதம் சைக்கிளை நிறுத்தினான்.

வையவன்

''வாங்க தம்பி, ஒரு டம்ளர் கரும்புப் பால் குடிச்சுட்டுப் போவீங்க.''

என்ன மனிதன் இவன்! இத்தனை காயங்களோடு இவனுக்கு உபசரிக்க வேறு தோன்றுகிறதே!

''அப்பறமா வர்றேன். கொஞ்சம் அர்ஜண்டு.''

மாசிலா அரைச் சிரிப்போடு அவனைப் பார்த்தான். பார்வையில் நன்றிக் கசிவு. எதற்கு? சைக்கிளில் அமர்த்தி வந்ததற்கா? அவன் பளுவைச் சற்று சுமை இறக்கக் காது கொடுத்துக் கேட்டதற்கா?

பூந்துறைக்குப் போய், டிரைவரிடம் நலம் விசாரித்து விட்டு, அப்பாவுக்கு ஒரு டஜன் சாத்துக்குடி வாங்கிப் பையில் போட்டு அனுப்பித் திரும்பினான்.

என்னென்னவோ கதை பேசியதில் மணி மூன்று. இன்ஸ்பெக்டர் வரச் சொன்னது நாலு மணிக்கு. வழக்கமாகக் கோயிலுக்குப் பின்னால் நித்யாவைச் சந்திப்பது இரவு ஏழரை மணிக்கு. மூன்று மணி நேரத்தில் வேலை முடியுமா? சைக்கிளை வேகமாய் மிதித்தான்.

இன்ஸ்பெக்டர் ஸ்டேஷனில் இருந்தார். கான்ஸ்டபிளைச் சாவி கொடுத்து வீட்டிற்கு அனுப்பினார்.

'அந்தக் கிணற்றில் வேலை முடிந்து வெளியே வந்த போது மணி ஏழு. வீட்டுக்குப் போனால் நேரமாகி விடும் என்று, அவன் கோயிலுக்குப் போனான். நேரம் கழித்துத்தான் நித்யா வந்தாள்.

வந்ததும் வராததுமாக அவள் பதறிச் சொன்னதைக் கௌதமால் நம்ப முடியவில்லை. திடீரென்று இப்படிச் சொன்னால் எதை நம்புவது?

''நியா? என்ன வெளயாடறியா நித்யா?''

அவள் வருத்தமாகப் பார்த்தாள். உதட்டைக் கடித்தாள். பின்பு தலையில் ஒருமுறை தட்டிக் கொண்டாள்.

''அங்கே திரும்பிப் பாரு.''

கௌதம் தன்வசமிழந்து திரும்பினான்.

தூரத்தில் நுணாமரத்து நிலத்துக்கு மேலே தீ நாக்குகள். சிவப்பும் நீலமும் துள்ளித் துள்ளிப் படர்ந்து ஆடும் வெளிச்சம்.

''காலைலே பதினொரு மணிக்கு என் சைக்கிள்ளே டபிள்ஸ் ஒக்கார வச்சுக் கூட்டிட்டுப் போனேனே.''

''யாரை?''

''மாசிலாவை.''

அவள் நம்பாதவள் போல் அவனைப் பார்த்தாள். அவனும் நம்ப முடியாதவன் ஆனான்.

திரும்பி நுணாமரத்து மேட்டைப் பார்த்தான். மீண்டும் அவளை. அடுத்து அந்தத் தீயை. அசாதாரணச் சம்பவம் ஒன்று, அதைக் கேள்விப்படுகிற நபரை, அதில் எங்கோ ஒரு புள்ளியில் தொடர்பு இருக்கிற நபரை, எப்படி அறைந்து தாக்குமோ, அப்படி கௌதமைத் தாக்கியிருந்தது.

ஒரு சில நொடிகள். எவ்வளவு நேரம் என்று காலம் வரையறுக்க முடியாத ஒரு வேகம். கௌதம் தலை சுழன்று குழம்புவது போல் இரண்டு விரல்களால் நெற்றியைப் பிடித்துக் கொண்டான்.

அவர்கள் நின்ற இடம் கோயிலுக்கு வெளியே தொடங்கி, ஆற்றுக்குப் பாதை இறங்கும் இடம். ஊரின் மேல்நிலைத் தொட்டிக்கு ஆற்றினுள் வெட்டிய ஆழ்கிணற்றைப் பம்ப் செய்யும் மோட்டார் ஷெட்.

''ரைட். நீ வீட்டுக்குப் போ!'' என்று அவன் வேகமாக நகரப் போனான்.

''நில்லு கௌதம்... எங்கே போறே?''

''அங்கேதான்!'' அவன் கை காட்டினான்.

''ஒரு புண்ணியமுமில்லே. ஊரே கூடி இருக்கு. சன்னிதித் தெருவே கூட்டமா நிக்குது. அந்தக் கூட்டத்தோட தான் நானும் நின்னிட்டிருந்தேன். நீ காத்துக்கிட்டிருப்பியேன்னுதான் ஓடி வந்தேன். அதனாலதான் லேட்டாச்சு.''

''இல்லே... எப்படியிருந்தாலும் நான் போகணும் நித்யா.''

அவளுக்கு அவன் பதற்றம் புரிந்தது. தடுப்பது சரியில்லை.

''சரி நீ போ!''

அவன் வேகமாக நாலு அடி எடுத்து வைத்தான். என்னவோ ஞாபகம் வந்த மாதிரி திரும்பி, ''நாளைக்குக் காலையிலே கோவிலுக்கு வர்றேன். எட்டு மணி.. என்ன? எட்டு மணி...'' என்று மறு முறை வலியுறுத்தி விட்டு நுணா மரத்தடிக்கு ஆற்றில் இறங்கி நெறு நெறுவென்று மணலை மிதித்துக் கொண்டு ஓடினான். உதய நிலா. கோடைப் பகல் நீண்டு விட்ட வெப்பம் தணியக் காற்று வீசிற்று.

ஆற்றில் இறங்கியதுமே ஊர் வெப்பத்தின் வேகம் தணிவது சட்டென்று புலப்பட்டது.

மணலில் பாதங்கள் புதைந்து வேகம்



ஒரு நாட்டின் முக்கியத் தலைவர் இறந்தால் அந்த நாட்டின் தேசியக் கொடியை அரைக்கம்பத்தில் பறக்க விடுவதுதான் சர்வதேச மரபு. ஆனால் சவூதி அரேபியாவின் கொடி மட்டும் எந்தச் சந்தர்ப்பத்திலும் கீழே இறக்கப்படுவது கிடையாது. காரணம், அந்தக் கொடியில் இஸ்லாத்தின் மூல மந்திரமான ''கலிமா'' பொறிக்கப்பட்டிருப்பதே!

தகவல்: தக்கோலம் முஸ்தபா.



''மணமக்களை வாழ்த்தச் சொல்லி ஜோக் எழுத்தாளரிடம் சொன்னது தப்பாப் போச்சு.''

''ஏன்... என்னாச்சு?''

''போலீசும் மாமூலும் போல, அரசியல்வாதியும் லஞ்சமும் போல, அரசு ஊழியரும் தூக்கமும் போல... மணமக்கள் சேர்ந்து வாழணும்னு சொல்ல ஆரம்பிச்சுட்டார்!''

— வி. ரேவதி.

தடைப்பட்டது.

ஓடிப் போய் என்ன செய்யப் போகிறோம்? மடத்தனமோ... யோசிக்க வேண்டாம். ஓடு. ஓடு.

நுணா மரம் நெருங்கி விட்டது. முதலில் ஊர்க் கூட்டத்தின் சந்தடி. அதை மீறிக் கொண்டு தீ கர்ஜிக்கிற ஒலி. என்ன இரைச்சல்! பட்பட்டென்று மூங்கிலோ உத்தரமோ வெடித்து விழும் ஓசை.

நுணாமரத்து மேட்டுக்கு ஒற்றையடிப் பாதை ஆற்றிலிருந்து ஏறியது. ஓரத்தில் நாகதாளி முட் புதர். ஏறிய வேகத்தில் நறுக்கென்று ஒரு முள். பொருட்படுத்தாமல் பாய்ந்து ஏறினான் கௌதம்.

குடிசையைச் சுற்றி அரை வளையமாகக் கூட்டம் நின்றது. ஆணும் பெண்ணும். சிறுவர்களும் பெரியவர்களும்.

ஊருக்குள் எப்போது தீப்பற்றினாலும் ஓடி வந்து விடும் வழக்கமான இளைஞர் பட்டாளம் ஒன்று, நாலடிக்கு நாலடியாக குடிசையின் இரண்டு மூலைகளிலும் வரிசையாய் ஆள் நின்று, பம்பு ஷெட் கிணற்றுக்குள்ளிருந்து வரும் தண்ணீர்க் குடங்களைக் கைமாற்றியது.

நடுவில் குடிசையைச் சுற்றி அதற்கு மேலே தீயின் ஆக்ரோஷம் இன்னும் உயர்ந்தது.

''சனியன் இந்நேரத்திலே காத்து எடுத்துக்குச்சே!''

கௌதம் வளையமிட்டு வேடிக்கை பார்த்த கூட்டத்தை இடித்துப் பிளந்து முன்னேறினான்.

சுதவு கற்பூரக் கட்டி எரிவது போல் கீழிருந்து மேலே ஜுவாலை விட்டது. ஐந்து அங்கணம் என்று அளவு கூறப்படுகிற நீளவாட்டுக் குடிசை அது. மஞ்சு போர்த்தியது.

குடிசைக்கு மஞ்சம்புல் நைந்து போனால் மாசிலா வண்டி ஓட்டிக் கொண்டு மலை ஓரத்திற்குப் போய் விடுவான். அறுப்பு ஆட்கள் கொண்டு வந்து போடும் சுமையைக் கட்டி வந்து அவனே கூரை போர்த்துவான்.

எரிவது அவனே போர்த்திய மஞ்சுதான். அது சுத்தமாக இரையாகித் தீர்ந்து விட்டது. வீசும் காற்றில் புல் கருகிய சாம்பல் பறந்தது.

தீ நெடுங்காலுக்கும், குறுக்குச் சட்டமாகப் போட்டிருந்த சவுக்குக்கும் மூங்கிலுக்கும் இறங்கி விட்டது.

''ஏம்பா இப்படி சட்டி பானையிலே தண்ணி கொண்டாறீங்க, பம்ப்ஷெட் மோட்டரைப் போடுங்களேன்.''

''பீஸ் காரியரை எவனோ பிடுங்கிட்டிருக்கானே''

ஃப்யூஸ் காரியர் பிடுங்கப்பட்டு விட்டதா? ஏதோ திட்டமிட்டு நடந்த மாதிரி அவனுக்குப் பொறி தட்டியது.

அவனை இடித்துத் தள்ளிக் கொண்டு தண்ணீர்க் குடம் எடுத்துப் போனவன் இப்போது மற்றொரு காலிக் குடத்துடன் திரும்பி வந்தான்.

''அவன் மோட்டார ஓட்டிடக் கூடாதுன்னு தொளசிங்கம் போன வாரமே புடுங்கிட்டுப் போயிட்டாரே!''

தீயின் வேகம் அவர்கள் ஊற்றிய தண்ணீரின் எல்லைக்கு மேலே உயர்ந்திருந்தது. காற்றின் ஒத்தாசை.

''வழக்கமா எட்டு ஒம்பது மணி வரைக்கும். களத்துலே கவுத்துக் கட்டிலைப் போட்டுப் படுத்திட்டிருப்பான். இன்னிக்கு ஏழு மணிக்கே கதவைச் சாத்திட்டுப் படுத்துட்டாம்பா!''

பக்கத்தில் எவரோ பேசினார்கள்.

''அன்னவாசல்லே ஃபுல்லா தண்ணி போட்டுட்டுத் தள்ளாடித் தடுமாறிட்டே வந்தானாம்... நம்ப நைனாப்பிள்ளே பார்த்தானாமே.''

''அவ தண்ணியடிக்கிறவனே இல்லேப்பா. எல்லாம் அவ போனதிலேர்ந்து நெதானம் போய்டுச்சு.''

நிலா வெளிச்சத்தையும் மீறி எரியும் தீயின் ஜ்வாலை சுற்றியிருந்தவர் முகத்தில் பிம்பமிட்டது.

நித்யா சொன்னது சரி. அவனால் செய்யக்கூடியது ஒன்றுமில்லை. ஆறு மணி நேரத்துக்கு முன் வருந்தியழைத்து சைக்கிள் கேரியரில் ஏற்றிச் சென்றவன் இதோ உள்ளே தகனமாகிக் கொண்டிருக்கிறான்.

மரணம் கௌதமுக்கு மிகவும் பழகியதுதான். எத்தனையோ சமயம் எதிர்பாராத முனையில், கற்பனைக்கு எட்டாத வகையில் அது அவனைக் கடந்து போயிருக்கிறது. சில முறை அல்ல. இந்த இளம் வயசில் பலமுறை.

எனினும் ஊர் முழுதும் கூடி ஒருவன் உயிரை மீட்கத் துடித்துப் போராடி அதில் முற்றிலும் தோற்று விட்டு நிற்கிற இம்முறை, அது வித்தியாசமாக அவனைச் சந்தித்திருக்கிறது.

(தொடரும்)

# பழகத் தெரிய வேண்டும்

கோபியும் ராதாவும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள்.

இளம் தம்பதிகளான அவர்களைத் தன் வீட்டிற்கு விருந்து சாப்பிட அழைத்திருந்தான் கோபியின் நண்பன் முரளி.

எப்போதடா சாப்பாடு முடியும், எப்போதடா திரும்பப் புறப்படுவோம் எனத் துடித்துக் கொண்டிருந்தான் கோபி. எல்லாம் இந்த ராதாவினால் வந்த வினை.

ராதா எம்.எஸ்.ஸி. வரை படித்திருக்கிறாள். பார்க்க அழகாக இருக்கிறாள். நன்றாகப் பாடவும் செய்வாள். என்ன பிரயோசனம்? வெளியிடங்களில் எப்படிப் பழக வேண்டும் எனத் தெரியவில்லையே! எதைச் சொல்லலாம், எதைச் சொல்லக் கூடாது என்ற யோசனை கொஞ்சம் கூட இல்லாமல், இப்படி மனத்தில் தோன்றியதையெல்லாம் அப்படியே கொட்டி விடுவாள் என்று கோபி கொஞ்சமும் எதிர்பார்க்கவில்லை.

கோபியையும் ராதாவையும் முரளி முக மலர்ச்சியுடன் வரவேற்றான். முரளியின் மனைவி நர்மதா — அவர்கள் திருமணம் முடிந்து ஆறு மாதங்கள்தான் இருக்கும் — ராதாவை வரவேற்று, முன்னறையில் உட்காரச் சொல்லி விட்டுச் சமையலறையில் எஞ்சியிருந்த வேலைகளைக் கவனிக்கப் போய் விட்டாள்.

ராதாவும் அவள் கூடப் போய் ஏதாவது உதவுவாள் என எதிர்பார்த்தான் கோபி. ஆனால் ராதாவோ நாற்காலியில் நன்றாகச் சாய்ந்தபடி உட்கார்ந்து, ஏதோ புத்தகத்தைக் கையில் எடுத்தாள்.

''நீ வேண்டுமானால் உள்ளே போய் அவர்களுடன் பேசிக் கொண்டு இரேன்!'' எனச் சொல்லிக் கூடப் பார்த்தான் கோபி.

''அவர்களுடன் பேச எனக்கு என்ன இருக்கிறது! நான் போய் அவர்கள் வேலையைக் கெடுப்பானேன்?'' என்றாள் ராதா.

பீரோவைத் திறந்து, தங்கள் திருமண போட்டோ ஆல்பத்தை எடுத்து ராதாவிடம் கொடுத்தான் முரளி.

ராதா புரட்டிப் பார்த்தாள். ''ஏதோ கத்துக்குட்டி எடுத்திருப்பான் போலிருக்கிறது. எல்லாமே ''ஓவர் எக்ஸ்போஸர்'. வெள்ளையடித்தாற் போல் தெரிகிறது...''

''ராதா ப்ளீஸ்... 'கமெண்ட்' இல்லாமல் ஆல்பத்தைப் பாரேன்'' என்றான் கோபி கொஞ்சம் கோபம் தோய்ந்த குரலில்.

ராதாவின் முகம் சிறுத்துப் போயிற்று. பார்த்துக் கொண்டிருந்த ஆல்பத்தை அப்படியே கீழே வைத்தாள். அங்கிருந்து 'சட்' டென்று எழுந்து வாயில் வராந்தாப் பக்கம் போனாள்.



முரளி ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

''பேசாமல் இரு... எல்லாம் தானாகச் சரியாகப் போய் விடும்'' எனத் தடுத்தான் கோபி.

அவன் சொன்னதும் சரிதான். ஐந்தே நிமிடங்களில் ராதா தானாக உள்ளே திரும்பி வந்தாள்.

''சொல்லுங்கள்... இது வாடகை வீடா, உங்கள் சொந்த வீடா?'' எனக் கேட்டாள் முரளியைப் பார்த்து.

''சொந்த வீடுதான்.. கட்டி நாலு மாதம் தான் ஆகிறது!'' என்றான் முரளி.

''இப்படிக் கலர் காம்பினேஷன் தெரியாமல் உள்ளே டிஸ்டெம்பர் அடித்திருக்கிறீர்களே... கண்களைக் கூசுவது போல இது என்ன ரோஸ் கலர்?''

முரளி என்ன சொல்வது எனப் புரியாமல் விழித்தான்.

மணிராஜ்

கோபி இருக்கை கொள்ளாமல் தவித்தான். ''சரி, ராதா.. நாம வீடு கட்டும் போது இதெல்லாம் யோசித்து...''

''எங்கே நாம் புதிதாக வீடு கட்டப் போகிறோம்... நீங்க அப்பாவுக்கு ஒரே பிள்ளை. பரம்பரையா வர்ற வீடுன்னு ஒரு 'சென்டிமென்ட்' இருக்கும். நம்ம குழந்தைகளாகப் பார்த்து இந்த ஹைதர் காலத்து வீடு வேண்டாம் எனக் கிளம்பினால்தான் போயிற்று...''

கோபிக்குச் சங்கடமாய்ப் போயிற்று. இவளை எப்படிச் சமாளிப்பது... நேராகச்





எழுத்தாளர் 1: 'டீ' அடிச்சாத்தான் எனக்கு எழுத மூட் வரும்!

எழுத்தாளர் 2: 'காப்பி' அடிச்சாத்தான் எனக்கு எழுதவே வரும்!

— த. செந்தமிழ்ச் செல்வன்.

சொன்னாலும் தெரியவில்லை. ஜாடையாகச் சொன்னாலும் புரியவில்லை.

இதற்குள் நர்மதா அவர்களைச் சாப்பிட அழைக்க வந்தாள்.

''இதோ பாருங்கள்.. உங்கள் இடது கன்னத்தில் இட்டாக ஏதோ கறுப்பு...''

நர்மதா தன்னிச்சையாகக் கன்னத்தைத் தன் புடைவைத் தலைப்பால் துடைக்கப் போனாள்.

''இதுதான் நமக்கு இருக்கிற கெட்ட பழக்கம். கையைத் துடைக்க, முகத்தைத் துடைக்க ஒரு 'நாப்கின்' எப்போதும் இருக்க வேண்டாமோ?'' எனக் கேட்டாள் ராதா.

நர்மதா ஒன்றும் பேசாமல் உள்ளே திரும்பிப் போனாள்.

அவர்கள் சாப்பிட உட்கார்ந்தார்கள்.

''எல்லாவற்றையும் மேஜை மேல் கொண்டு வந்து வையுங்கள். எல்லோருமாக எடுத்துப் போட்டுக் கொண்டு சாப்பிடலாம்!'' என அழைத்தாள் ராதா.

''இல்லை. இல்லை... நீங்கள் முதலில் சாப்பிடுங்கள்... நான் அப்புறமாக...''

''சரி சமமாக உட்கார்ந்து சாப்பிட்டால் உங்கள் வீட்டுக்காரர் ஏதாவது சொல்வாரா? இவர் அப்படி எல்லாம் சொல்ல மாட்டார். நான் பசித்தால் சாப்பிட்டு விடுவேன். யாருக்காகவும் காத்திருக்க மாட்டேன்! ஏன் காத்திருக்க வேண்டும்? வயிற்றைக் காயப் போட்டுத்தான், பதி பக்தியைக் காட்ட வேண்டுமா, என்ன?''

கோபி ஒரு தீர்மானத்திற்கு வந்தான்.

எத்தனை சீக்கிரமாகச் சாப்பிட முடியுமோ சாப்பிட்டு, எத்தனை விரைவில் வீடு திரும்ப முடியுமோ அத்தனை விரைவில் புறப்பட வேண்டும்.

சாப்பாடு முடிந்தவுடன் வெற்றிலை பாக்குத் தட்டுடன் வாழைப் பழமும் கொண்டு வந்து வைத்தார்கள்.

''நான் ரஸ்தாளிப் பழம் தவிர வேறு எதையும் தொடக் கூட மாட்டேன்!'' என்ற ராதா தட்டை அப்படியே நகர்த்தி வைத்தாள்.

சுமங்கலிப் பெண் வந்திருக்கிறாளே என வெற்றிலை பாக்குடன் ஒரு ரவிக்கைத் துண்டு வைத்துக் கொடுத்தாள் நர்மதா.

''இது என்ன சம்பிரதாயமோ?'' என ராதா ஆரம்பித்து விட்டாள். ''இந்தத் துணிக்குப் பொருத்தமாக என்னிடம் புடைவை இல்லை. இதற்காக நான் முந்நூறும் நானூறும் போட்டுப் புடைவை வாங்க முடியுமா? நீங்கள் என் தலையில் கட்டியது போல், நானும் யாரிடமாவது தள்ள வேண்டியது தான்...'' எனச் சிரித்தாள்.

இதை வேடிக்கையாக எடுத்துக் கொள்வதா? குத்தலாக எண்ணிக் கோபிப்பதா?

''சரி சரி... நேரமாகிறது வா!'' என அவசரமாக அழைத்து வந்தான் கோபி.

**கோ**பியும் ராதாவும் வீடு திரும்பினார்கள்.

வரும் வழியில் கோபி முகத்தை 'உர்' ரென்று வைத்துக் கொண்டு வந்தான். ஒரு வார்த்தை கூட ராதாவிடம் பேசவில்லை.

''என்ன? ஏதாவது கோபமா?'' வீட்டுக்குள் வந்ததும் கேட்டாள் ராதா.

''கோபமா! சே! எத்தனை பெருமையாக, எவ்வளவு கௌரவமாக இருந்தது? போன இடத்தில் வாயை மூடிக் கொண்டு அடக்கமாக இருந்து விட்டு வராமல்... லொடலொடன்னு என்ன பேச்சு...? மற்றவர்கள் மனம் புண்படுமே என்று கொஞ்சம் கூட யோசனை இல்லாமல்....''

''நான் என்ன தப்பாகச் சொன்னேன். மனத்தில் பட்டதை, உள்ளது உள்ளபடி...''

''பெரிய ஹரிச்சந்திரன் பரம்பரை... உண்மையைச் சொன்னாளாம்.. மனத்தை ரணப்படுத்தக் கத்தி வேண்டாம். இரண்டு வார்த்தைகள் போதும்.''

ராதாவின் கண்கள் கலங்கின.

''ஸாரி! நான் செய்தது தப்புன்னா — ஐ ஆம் வெரி ஸாரி... மன்னித்துக் கொள்ளுங்கள். ஒரு சின்ன வேண்டுகோள். குறுக்கே பேசாமல் நான் பேசுவதை இரண்டு நிமிஷம் கேட்க முடியுமா?''

''உம்...''

''என் கல்யாணத்தின் போது பத்தாயிரம் ரூபாய் கொடுத்து ஸ்பெஷல் தறியில் எனக்கு நாலு பட்டுப் புடைவைகள் வாங்கினார்கள். அத்தனை மனிதர் மத்தியில் அதைப் பிரித்து 'ஜரிகையே இல்லை. கலர் மட்டம். பழைய சரக்கு. எங்கேயாவது 'தள்ளுபடி விலையில் வாங்கியிருப்பார்கள்' என்று உங்கள் அம்மா சொன்னார்கள். ஒவ்வொரு வெள்ளிப் பாத்திரத்தையும், தூக்கிப் பார்த்துத் 'தகரத்தில செய்தாக் கூட இன்னும் கனமாக இருக்கும்' என்றார்கள். 'பட்சணம் எல்லாம் என்ன எண்ணெயில் செய்தார்களோ, பார்த்துச் சாப்பிடுங்கள்' எனத் திருப்பித் திருப்பிச் சொன்னார்கள்.

ஒரு
# போஸ்ட் கார்டு போதும்!...

மேலும் ஆங்கிலத்தில் பேச வேண்டும் என்ற எனது நீண்ட நாளைய விருப்பம் உங்களது பயிற்சியின் மூலம் நிறைவேறும் என நம்புகிறேன். எனவே முன் கண்ட எனது முகவரிக்கு இப் பயிற்சி பற்றிய தகவல் பத்திரத்தையும் விண்ணப்ப மனுவையும் அனுப்புமாறு வேண்டுகிறேன்.

இப்படிக்கு
எம். வளர்மதி
மாரீக்கம்பட்டி.




விவேகானந்தா கல்வி நிலையம்
9 மேட்லி ரோடு
தி. நகர்
சென்னை
पिन PIN 600017

உங்களுக்கும் உஙகளது முன்னற்றத் திற்கும் இடையில் இப்பொழுது உள்ள தூரம் ஒரு போஸ்ட் கார்டு தான் என்று நாங்கள் கூறினால் அது சற்று மிகையாகத் தோன்றும். ஆனால் உண்மை அதுதான்.

நீங்கள் வாழ்க்கையில் முன்னேறு வதற்கு ஆங்கில மொழியில் போதிய பயிற்சியின்மை ஒரு தடை யாக இருந்திருந்தால்........

மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அதை ஓரளவு புரிந்து கொண் டும், அதற்கு ஆங்கிலத்திலேயே பதில ளிக்க முடியவில்லையே என்ற குறை உங்களிடம் குடி கொண்டிருந்தால்,

பல புத்தகங்களைப் படித்தும் ஆங் கிலத்தில் பேச முடியவில்லையே என்ற சலிப்பு உங்களுக்கு ஏற்பட்டிருந்தால்,

நீங்கள் எதிர்பார்க்கும் முன்னேற் றத்தை இப்பொழுது அடைய ஒரே ஒரு போஸ்ட்கார்டு போதும்...ஆமாம்!

ஆங்கிலத்தில் இலக்கணப் பிழை யின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத வேண்டும், தயக்க மின்றி சரளமாகப் பேசவேண்டும் என்ற உங்களது விருப்பத்தை ஒரு போஸ்ட் கார்டில் எழுதி தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்று போற்றப்படும் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு இன்றே அனுப்புங்கள்.

நீங்கள் மேற்கொள்ள வேண்டிய பயிற்சியைப் பற்றியும் மற்ற தகவல் களையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைப்பார்கள்.

வீட்டிலிருந்த படியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் இந்த எளிய பயிற்சி முறையை நீங்கள் மேற் கொள்ளலாம்.

"நேர்முகப்பயிற்சியும் உண்டு."

என்ன?.....எங்கே கிளம்பி விட்டீர் கள்? போஸ்ட் கார்டு வாங்கத்தானே?

உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி துவங்கிவிட்டது.

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி

---

**விவேகானந்தா கல்வி நிலையம்**
**9, மேட்லி ரோடு,**
**தி. நகர், சென்னை - 17.**

NAGA

---

ஊர் திரும்பியதும், விருந்தாளிகள் முன்னிலையிலேயே என் நகைகளை எடைபோட்டு மாற்றுப் பார்க்கக் கொடுத்தார்கள். நான் இதையெல்லாம் மனவருத்தத்தோடு உங்களிடம் சொன்ன போது நீங்கள் என்ன சொன்னீர்கள், ஞாபகம் இருக்கிறதா?''

முரளி பதில் பேசவில்லை.

''எனக்குத் தெரியும். இதெல்லாம் உங்களுக்கு ஞாபகம் இருக்காது. இருந்தாலும் சொல்ல மாட்டீர்கள். நானே சொல்கிறேன். 'என் அம்மா சொல்றதையும் செய்யறதையும் தப்பாக எடுத்துக் கொள்ளாதே... அவள் வெகுளி. மனத்தில் ஒன்றும் வெளியே ஒன்றும் பேசத் தெரியாது...' என என்னைச் சமாதானப்படுத்தினீர்கள். உங்கள் அம்மா வெகுளி என்று பெருமைப் பட்டுக் கொண்டீர்கள். இப்போது என்னைக் குற்றம் சாட்டுகிறீர்கள்? இது எப்படி நியாயமாகும்? கேட்கிறேன்!''

கோபிக்குக் கோபம் அடங்கவில்லை.

''சரி... சரி என் அம்மா ராட்சசி.. கொடுமைக்காரி.. தெரியாத்தனமாக இங்கே வாழ்க்கைப் பட்டு விட்டாய்! இப்போது என்ன செய்வதாக உத்தேசம்?''

''உம்... இதுதான் இங்கிதமாக நடந்து கொள்வதா? பழகத் தெரிந்த லட்சணமா? உங்கள் அம்மாவை நான் குற்றம் சொல்லவில்லை. இந்த வீட்டில் நான் என் மனத்தை யாரிடம் திறந்து கொட்ட முடியும்? நான் சொல்லுவதிலும் ஓர் அர்த்தம் இருக்கிறது. என் மனம் பட்ட வேதனை என்ன என்பதை ஒரு கோடி காட்டத்தான் நான் இப்படி நடந்து கொண்டேன். தெரிந்தே தான் செய்தேன்.''

கோபிக்கு ஆத்திரம் பீறிட்டது.

''ரொம்ப நன்றாக இருக்கிறது நீ செய்தது. நான் மறுபடி முரளியையும் நர்மதாவையும் பார்த்து எந்த முகத்தை வைத்துக் கொண்டு பேசுவது? உன்னைப் பற்றியும் என்னைப் பற்றியும் என்ன நினைப்பார்கள்?''

''ஒன்றும் தப்பாக நினைக்க மாட்டார்கள். நர்மதாவை எனக்குச் சிறு வயதிலிருந்தே தெரியும். நான் ஏன் அப்படிச் செய்தேன் என்பதை அவள் நிச்சயம் தெரிந்து கொண்டிருப்பாள்.''

''அப்படியா!'' எனக் கூறிய கோபி, புன்முறுவலுடன் ராதாவை அணைக்க முற்பட்டான். அவள் சட்டென்று விலகிக் கொண்டாள்.

''கண்ணாடியில் போய் உங்கள் முகத்தைப் பாருங்கள். லிட்டர் கணக்கில் அசடு வழிகிறது. ஓ... ஐ ஆம் ஸாரி... இப்படிச் சொல்லியிருக்கக் கூடாது. என்ன செய்வது... எனக்கும் உங்கள் அம்மா மாதிரி மனத்தில் ஒன்றும் வெளியில் ஒன்றுமாகப் பேசத் தெரியவில்லையே!'' என்று சிரித்தாள்.

அவனும் கூடச் சேர்ந்து கொண்டு சிரித்தான்.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 57

## விடுதலை

வந்தியத்தேவன் சிறிது நேரம் வாசற்படிக்கருகில் கவலையுடன் தயங்கி நின்றான். புலிகளைப் பார்த்த வண்ணம் மீசையில் கையை வைத்து முறுக்கிக் கொண்டு நின்ற காவலன் மீது பாய்ந்து அவனைத் தீர்த்துக் கட்டிவிட்டு மேலே போகலாமா என்று ஒரு கணம் யோசித்தான். ஆனால் புலிக் கூண்டுகளுக்கு அப்பால் அடுத்த வாசற்படிக்கருகில் மற்றும் இரு காவலர்கள் நிற்பது தெரிந்தது. அவர்களில் ஒருவன் இந்தக் காவலனுக்கு ஏதோ சமிக்ஞையினால் தெரிவித்துவிட்டு அப்பால் போனான். ஒருவேளை தன்னைப் பற்றித்தான் அவர்கள் ஜாடையாகப் பேசிக் கொள்கிறார்களோ? இந்தக் காவலனைத் தாக்கி வீழ்த்தி விட்டுப் போனாலும், அப்பால் இதுபோன்ற பல வாசற்படிகளும் அவற்றில் காவலர்களும் இருப்பார்கள். அவர்களையெல்லாம் சமாளித்து விட்டுத் தப்பிச் செல்ல முடியுமா? அதைக் காட்டிலும் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று புலிக் கூண்டுகளைத் திறந்து விட்டால் என்ன? அப்போது ஏற்படக் கூடிய குழப்பத்தில் தப்பிச் செல்வது எளிதாக இருக்கும் அல்லவா?......

இப்படி அவன் எண்ணிய போது, காவலன், "ஓகோ! தப்பித்துக் கொள்ளலாம் என்று பார்க்கிறாயோ?" என்று கூறியதைக் கேட்டு வந்தியத்தேவன் ஒரு கணம் திடுக்கிட்டான்.

புலிகளில் ஒன்று உறுமியது.

"அட நாயே! சும்மா கிட!" என்று அதட்டினான் காவற்காரன்.

அவன் புலியுடன் பேசுகிறான் என்று அறிந்ததும் வந்தியத்தேவன் சிரித்தான்.

காவற்காரன் திரும்பிப் பார்த்தான்.

"பின்னே பாருங்க, ஐயா! இந்தப் புலி என்னை மிரட்டப் பார்க்கிறது. இது மாதிரி எத்தனையோ புலிகளை நான் பார்த்திருக்கிறேன்! இந்தச் சிங்கத்திடம் அதன் ஜம்பம் சாயாது!" என்று கூறி மறுபடியும் மீசையை முறுக்கினான்.

வந்தியத்தேவன், "கூண்டுக்குள் இருக்கும் வரையில் புலியும் எலியும் ஒன்றுதான்! அதன் ஜம்பம் எப்படிச் சாயும்?" என்று சொல்லி விட்டுக் கையிலிருந்த பெரிய வேளாரின் இலச்சினையைக் காட்டினான்.

"போங்க, ஐயா, போங்க! முதன் மந்திரியின் ஆட்கள் வாசலிலே உங்களுக்காகக் காத்திருக்கிறார்களாம்! சீக்கிரம் போங்க!"

அமரர் கல்கி

என்று கூறிவிட்டு, அவர்கள் வந்த பக்கத்தை நோக்கி, "அடே பைத்தியக்காரா! சும்மா இருக்க மாட்டே!" என்று கூவினான்.

அச்சமயம் வந்தியத்தேவன் பைத்தியக்காரனின் கையைப் பிடித்துக் கொண்டிருந்தான். அவன் கை நடுங்குவதைத் தெரிந்து கொண்டு, கையை இறுக்கிப் பிடித்துத் தைரியப் படுத்தினான்.

பிறகு, காவற்காரனைத் தாண்டி இருவரும் முன்னால் சென்றார்கள்.

"விடுதலை வேண்டுமாம், விடுதலை! எல்லாரையும் விடுதலை செய்து விட்டால், பிறகு எங்கள் பிழைப்பு என்ன ஆகிறது?" என்று அந்தக் காவலன் கூறியது அவர்கள் காதில் விழுந்தது.

வந்தியத்தேவன் எவ்வளவோ துணிவுள்ளவனாயினும், அச்சமயம் அவன் நெஞ்சம் பக், பக் என்று அடித்துக் கொண்டிருந்தது. வாசலில் முதன் மந்திரியின் ஆட்கள் காத்துக் கொண்டிருப்பதாகக் காவலன் சொன்னது அவன் மனத்தில் பதிந்திருந்தது. சிறைக்குள்ளே இருட்டாயிருக்கிறது; அதனால் இங்குள்ள காவலர்களை எளிதில் ஏமாற்றி விட்டுச் செல்லலாம். வெளியில் வெளிச்சமாயிருக்குமே? முதன் மந்திரியின் ஆட்கள் இந்த ஆள் மாறாட்டத்தைக் கண்டு பிடித்து விட்டால் என்ன செய்கிறது? ஆயினும் பார்க்கலாம் ஒரு கை! எதற்கும் தயாராயிருக்க வேண்டியதுதான்! நல்ல வேளையாக இந்தப் பைத்தியக்காரனும் கெட்டிக்காரப் பைத்தியக்காரனாயிருக்கிறான். சமயத்தில் கைகொடுப்பான்!......

பாதாளச் சிறையில் பல வாசல்களையும் கடந்து பிறகு தங்க நாணய வார்ப்படச் சாலையின் வாசல்களையும் கடந்து அவர்கள் விரைந்து சென்றார்கள். ஆங்காங்கேயிருந்த காவலர்கள் அவர்களிடமிருந்த வேளாரின் இலச்சினையைப் பார்த்ததும் ஒதுங்கி வழிவிட்டார்கள். இவர்களை யாரும் சந்தேகிக்கவும் இல்லை; உற்றுப் பார்க்கவும் இல்லை.

போகும்போதே வந்தியத் தேவன் பரபரப்புடன் யோசித்து ஒரு திட்டம் போட்டுக் கொண்டான். நீண்ட அறை ஒன்றில் அவர்கள் போய்க் கொண்டிருந்தபோது அவனுடைய துணைவன் காதில், "நீ முதன் மந்திரி வீட்டுக்குப் போகப் போகிறாயா? என்னுடன் வருகிறாயா?" என்று கேட்டான்.

"முதன் மந்திரி வீட்டுக்குப் போனால் மீண்டும் பாதாளச் சிறைதான்! உன்னுடனே வருவேன்! நீ எங்கே போவதாக உத்தேசம்?" என்றான்.

"கடவுள் அருள் இருந்தால், ஈழ நாட்டுக்கே போய் விடலாம்! முதன் மந்திரியின் ஆட்களுக்கு முன்னால் நீ என்னைப் 'பினாகபாணி!' என்று கூப்பிடு!..... உன் பெயர் என்ன?"

"பைத்தியக்காரன்!"

"உண்மையான பெயர்? உன் பெற்றோர்கள் வைத்த பெயர்?"

"ஆ! அதுவா! பெற்றோர்கள் எனக்குக் 'கரியதிருமால்' என்று பெயரிட்டனர். சுற்றத்தாரும் ஊராரும் 'கருத்திருமன்' என்று அழைத்தார்கள்!"

"நல்ல பெயர்தான்! கருத்திருமா! தஞ்சை வீதிகளில் நாம் போகும்போது உன் தோளைத் தொடுவேன். உடனே நீ என்னுடன் ஓடி வரச் சித்தமாயிருக்க வேண்டும். நன்றாக ஓடுவாய் அல்லவா?"

"ஓ! ஓட்டத்தில் ஈழத்தரசன் மகிந்தன் கூட என்னுடன் போட்டியிட முடியாது!"

வந்தியத் தேவன் சிரித்தான்,

"நீ நல்ல பைத்தியக்காரன்!" என்றான்.

பொற்காசு வார்ப்படச் சாலையைக் கடந்து அவர்கள் வெளியில் வந்தார்கள்.

வந்தியத் தேவன் பயந்தபடி அங்கே முதன் மந்திரியின் ஆட்கள் ரொம்பப் பேர் இல்லை. இரண்டே இரண்டு பேர்தான் இருந்தார்கள்.. அவர்களில் ஒருவன் நல்ல குண்டன். வந்தியத் தேவனுக்கு அவனை எங்கேயோ எப்போதோ பார்த்த மாதிரி இருந்தது. தெளிவாக நினைவுக்கு வரவில்லை.

"நீங்கள் தானே முதன் மந்திரியின் ஆட்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

"என்ன தம்பி, அதற்குள்ளேயா மறந்து போய் விட்டாய்?" என்றான் அவர்களில் ஒருவன்.

"இல்லை, இல்லை! நீங்கள் தானே எங்களை முதன் மந்திரி வீட்டுக்கு அழைத்துப் போகப் போகிறீர்கள்?" என்றான் வந்தியத்தேவன்.

"ஆமாம்; நாங்கள்தான்! நீ முதன் மந்திரி வீட்டுக்குப் போகும் வழியைக் கூட மறந்து போனாலும் போய்விடுவாய்!"

அப்போது கருத்திருமன், வந்தியத்தேவன் கூறியதை நினைவு கூர்ந்து, "அப்பா, பினாகபாணி! எனக்குப் பயமாயிருக்கிறது! முதன் மந்திரி மறுபடியும் என்னைப் பாதாளச் சிறையில் தள்ளி விடுவாரோ, என்னவோ!" என்றான்.

"அதெல்லாம் மாட்டார், அப்பனே! எங்கள் முதன் மந்திரியின் சமாசாரம் உனக்குத் தெரியாது போலிருக்கிறது. ஆனால்,

தப்பித்துக் கொள்ள மட்டும் பார்க்காதே! அப்படி ஏதாவது செய்தால், நாங்கள் பாதாளச் சிறையில் இருக்க நேரிடும்!''

இவ்விதம் சொல்லி விட்டு அந்த ஆட்களில் குண்டனாயிருந்தவன் முன்னால் நடந்தான். இன்னொருவன் வந்தியத் தேவனுக்கும் கருத்திருமனுக்கும் பின்னால் காவலாக வந்தான்.

தஞ்சாவூர் வீதிகளில் கலகலப்பே இல்லை. ஜனசஞ்சாரமும் இல்லை. ஆதித்த கரிகாலரின் இறுதிச் சடங்குகளினால் ஏற்பட்ட கிளர்ச்சிகள் அடங்கி விட்ட பிறகு கோட்டைக்குள் வசித்தவர்கள் அவர்களுடைய அலுவல்களில் ஈடுபட்டிருந்தார்கள். கோட்டைக்கு வெளியில், கொடும்பாளூர்ப் படைகள் கடுமையாகக் காவல் புரிந்து வந்தன. கோட்டைக்கு வெளியிலிருந்து யாரும் உள்ளே வருவதற்கு அனுமதிக்கப்படவில்லை.

வந்தியத் தேவன் இரு புறமும் உற்றுப் பார்த்துக் கொண்டு நடந்தான். அந்த இரண்டு ஆட்களிடமிருந்து தப்பிச் செல்வது மிகவும் சுலபம். ஆனால், மறுபடியும் பிடிபடாமல் இருக்க வேண்டுமே? கோட்டைக்குள்ளிருந்து வெளியேறுவதற்கும் வசதியாக இருக்க வேண்டுமே? இந்த எண்ணத்தினால், வந்தியத் தேவன் வீதியின் இரு பக்கங்களையும் உற்று உற்றுப் பார்த்துக் கொண்டு நடந்தான்.

பெரிய பழுவேட்டரையருடைய அரண்மனை வாசலைத் தாண்டிச் சென்றதும், வந்தியத் தேவனுடைய பர பரப்பு அதிகமாயிற்று. அடுத்தாற்போல், அந்தச் சந்து வரப் போகிறது! முன்னொரு தடவை சின்னப் பழுவேட்டரையரின் ஆட்களிடமிருந்து தான் தப்பி ஓடிச் சென்ற சந்துதான்! அதைத்தான் அவனும் எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். வளைந்து வளைந்து சென்ற அச்சந்தில் மூலை முடுக்குகள் அதிகம் இருந்தன. இரண்டு புறமும் தோட்டச் சுவர்கள். சுவர்களின் மேலாக வெளியில் தாழ்ந்து தொங்கிய மரங்கள். அங்கேதான் இக் காவலர்களிடமிருந்து தப்பி ஓடினால் ஓடலாம். முன்போலவே பெரிய பழுவேட்டரையருடைய மாளிகைத் தோட்டத்துக்குள் குதிக்கலாம். அங்கே குதித்து விட்டால் அடர்ந்த மரங்களுக்கிடையே ஒளிந்து கொள்ள வசதியாயிருக்கும். முன்போலவே, பொக்கிஷ நிலவறைப் பாதை மூலமாக வெளியேறவும் இலகுவாயிருக்கும். வேறு வழியில் தப்புவது சாத்தியமில்லை......

தோ அந்தச் சந்து வழி, அவன் முன் தப்பிச்சென்ற வழி, வந்துவிட்டது.

வந்தியத் தேவன் கருத்திருமனுடைய தோளைத் தொடலாமா என்று எண்ணினான்? ஆனால் இது என்ன? அங்கே யார் கூட்டமாக வருகிறார்கள்? சிவிகைகள்! குதிரைகள்! கையில் வேல் பிடித்த காவல் வீரர்கள்!

இவ்வளவு ஆர்ப்பாட்டத்துடன் வருகிறவர்கள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவோ, பெருந்தர அதிகாரிகளாகவோ இருக்க வேண்டும்.

இதை உணர்ந்து முதன் மந்திரியின் ஆட்கள் சுற்று முற்றும் பார்த்தார்கள். வந்தியத்தேவன் கவனத்தைக் கவர்ந்த சந்தை அவர்களும் கவனித்தார்கள். உடனே அவ்விடம் சென்று ஒதுங்கி நின்றார்கள். தாங்கள் அழைத்து வந்த இருவரையும் தங்களுக்குப் பின்னால் நிறுத்திப் பிறர் அறியா வண்ணம் அவர்களை மறைத்துக் கொண்டு நின்றார்கள்.

எதிரில் கூட்டமாக வந்தவர்கள் விரைவில் அந்த இடத்தை அடைந்து அவர்களைத் தாண்டிச் சென்றார்கள்.

முன்னால் வேல் பிடித்த வீரர்கள் சிலர். பிறகு, மூன்று கம்பீரமான வெண் புரவிகளின் பேரில் மலையமானும் கொடும்பாளூர் வேளாரும் அவர்களுக்கு நடுவில் ஒருவரும் வந்தனர். நடுவில் வந்தவர் பொன்னியின் செல்வர் என்பதை வந்தியத் தேவன் கண்டான்.

ஆகா! எவ்வளவு சமீபத்தில் இருக்கிறார்? ஆனாலும், எவ்வளவு தூரமாகப் போய் விட்டார்?

ஒரு கணம் வந்தியத் தேவன் எண்ணினான்: காவலர்களை மீறி ஓடிச் சென்று அவர் முன்னால் நிற்கலாமா என்று. உடனே அந்தக் கருத்தை மாற்றிக் கொண்டான். தமையனைக் கொன்றதாகக் குற்றம் சாட்டப் பட்டவனுக்குப் பொன்னியின் செல்வர் தான் எப்படிக் கருணை காட்ட முடியும்?.... அல்லது சிநேக உரிமை கொண்டாட முடியும்?..... தன்னைப் பார்த்ததும் அவர் அருவருப்பு அடைந்தாலும் அடையலாம். பக்கத்திலுள்ள மலையமானும் வேளாரும்



என்ன செய்வார்கள் என்று சொல்ல முடியாது.

இதற்குள் அவர்களுக்குப் பின்னால் வந்த சிவிகைகளின் மீது வந்தியத் தேவன் கவனம் சென்றது.

ஆகா! இளைய பிராட்டி குந்தவை! கொடும்பாளூர் இளவரசி வானதி! சம்புவரையர் மகள் மணிமேகலை!

வந்தியத் தேவனுடைய நெஞ்சு படாத பாடு பட்டு விம்மித் துடித்தது.

வேறு எந்தச் சந்தர்ப்பமாயிருந்தாலும், இந்த மூன்று பெண்மணிகளில் எவரையும் அணுகி உதவி கோரலாம். அவர்களும் மனமுவந்து உதவி செய்வார்கள். ஆனால், இப்போது? ஆதித்த கரிகாலனை வஞ்சகத் துரோகம் செய்து கொன்றவனைப் பார்த்தால் இளைய பிராட்டியும் இளவரசி வானதியும் எத்தனை அருவருப்புக் கொள்வார்கள்?

போகட்டும். இந்தப் பேதைப் பெண் மணிமேகலையை இவர்கள் தங்களுடன் சேர்த்துக் கொண்டிருக்கிறார்களே? அதற்காக மகிழ்ச்சி அடைய வேண்டியதுதான். மணிமேகலை இவர்களிடம் கடம்பூரில் நடந்ததையெல்லாம் சொல்லியிருப்பாளா? தன்னைத் தப்புவிப்பதற்காக 'நான்தான் கொன்றேன்' என்று சொன்னாளே, அம்மாதிரி இவர்களிடமும் சொல்லியிருப்பாளா? இல்லை, சொல்லியிருக்கமாட்டாள். அவ்விதம் சொல்லியிருந்தால் இவர்கள் அவளைத் தங்களுடன் இவ்வளவு ஆதரவாக அழைத்துப் போக மாட்டார்கள்.

சிவிகைகள் அவர்கள் நின்று கொண்டிருந்த சந்தைக் கடந்து சென்றன. பின்னால் வந்த காவலர்களும் போனார்கள்.

''சரி; வாருங்கள்! இனி நாம் போகலாம்'' என்று சொல்லிவிட்டு முதன் மந்திரியின் ஆட்கள் முன்னால் நடந்தார்கள்.

வந்தியத் தேவன் ஒரு நொடியில் 'இதுதான் சமயம்' என்ற முடிவுக்கு வந்தான். கருத்திருமனுடைய தோளைத் தொட்டு விட்டுச் சந்து வழியாக ஓட்டம் பிடித்தான். கருத்திருமனும் அவனைத் தொடர்ந்து ஓடினான்.

காவலர்கள் இருவரும் பின்னால் ஓடி வரும் சத்தம் கேட்டது. சிறிது நேரம் வரையில் திரும்பிக்கூடப் பார்க்காமல் இருவரும் ஓடினார்கள். முதலில், கருத்திருமன் திரும்பிப் பார்த்தான்.



''ஒருவன் பின்தங்கி விட்டான்; ஒருவன்தான் வருகிறான்!'' என்றான்.

வந்தியத்தேவனும் திரும்பிப் பார்த்துக் குண்டன் பின் தங்கி விட்டதை அறிந்தான். ஒருவனாயிருந்தாலும், அவனுடன் நின்று சண்டை பிடிக்கப் பார்ப்பது அறிவுடைமையாகாது. ஆகையால், கருத்திருமனுக்கும் சமிக்ஞை காட்டி விட்டு மேலே ஓடினான்.

முன்னொரு தடவை அவன் மதில் சுவர் ஏறிக் குதித்த அதே இடத்தை அடைந்த பிறகுதான் நின்றான். முறிந்து வளைந்திருந்த கிளை அப்படியே இன்னும் இருந்தது. அதைப் பிடித்துத் தாவிச் சுவர் மீது ஏறிக் கொண்டான். கருத்திருமனையும் கையைப் பிடித்துத் தூக்கி ஏற்றி விட்டான்.

இருவருமாக, முறிந்து மடிந்திருந்த அந்த மரக்கிளையைச் சிறிது ஆட்டித் துண்டித்தார்கள்.



பின் தொடர்ந்து வந்த ஆள் அருகில வந்ததும் அவன் பேரில் தள்ளினார்கள்.

மரக்கிளை அவன் பேரில் விழுந்ததா என்பதைக் கூடக் கவனியாமல் சுவர் மேலிருந்து தோட்டத்தில் குதித்தார்கள். அடர்ந்த மரங்கள் – புதர்கள் இவற்றினிடையே புகுந்து சென்று, மறைந்து கொண்டு நின்று, சுவரைக் குறி வைத்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

யாரும் தங்களைத் தொடர்ந்து பிடிப்பதற்குத் தோட்டத்துக்குள் குதிக்கவில்லை என்று தெரிந்து கொண்டு மேலே சென்றார்கள்.

''அப்பா! தப்பிப் பிழைத்தோம்!'' என்றான் வந்தியத்தேவன்.

''இதற்குள் என்ன ஆகிவிட்டது? கோட்டைக்கு வெளியே போவது எப்படி?'' என்றான் கருத்திருமன்.

''அதற்கு வழி இருக்கிறது கொஞ்சம் பொறுமையாயிரு!''

பழுவேட்டரையரின் மாளிகையை நெருங்கியதும் வந்தியத் தேவன் நின்றான். மாளிகையில் முன் போலக் கலகலப்பு இல்லைதான். ஆயினும் நடமாட்டம் இருந்தது. இருட்டும் நேரத்தில் பொக்கிஷ நில வரையில் புகுவதுதான் உசிதமாயிருக்கும்.

இவ்விதம் தீர்மானித்து ஒரு மரக்கட்டையின் மீது உட்கார்ந்தான். கருத்திருமனையும் உட்காரச் செய்தான்.

''இனி இருட்டிய பிறகுதான் நம் பிரயாணத்தைத் தொடங்க வேண்டும். அது வரையில் உன்னுடைய கதையைச் சொல்லு, கேட்கலாம்!'' என்றான்.

''அதுதான் சொல்ல முடியாது என்று முன்னமே சொன்னேனே?''

''அப்படியானால், உன்னை வெளியே அழைத்துப் போகவும் முடியாது.''

''நான் உண்மையைச் சொல்லாமல், ஏதாவது கற்பனை செய்து கூறினால் என்ன பண்ணுவாய்?'' என்றான்.

''கதை – கற்பனை எதுவாயிருந்தாலும் சொல்லு! கொஞ்ச நேரம் பொழுது போக வேண்டும் அல்லவா?''

கருத்திருமன் சொல்லத் தொடங்கினான். உண்மையிலேயே அது அபூர்வமான பல சம்பவங்கள் நிறைந்த கற்பனைக் கதை போலவே இருந்தது.

## அத்தியாயம் 58

# கருத்திருமன் கதை

கரியதிருமால் என்னும் கருத்திருமன் கோடிக் கரைக்குச் சிறிது வடக்கே கடற்கரை ஓரத்தில் உள்ள தோப்புத்துறை என்னும் ஊரினன். அங்கிருந்து ஈழத் தீவுக்குப் படகு செலுத்திப் பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தான். சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் அவன் ஒரு முறை ஈழத்திலிருந்து தோப்புத்துறைக்கு வந்து கொண்டிருந்த போது புயல் அடித்துக் கடல் கொந்தளித்தது. படகு கவிழாமல் கரையில் கொண்டு வருவதற்கு மிகவும் பிரயாசைப் பட்டான். கோடிக் கரைக் கலங்கரை விளக்கின் அருகில் வந்து அவன் கரையை நெருங்கியபோது ஒரு பெண் அக் கொந்தளித்த கடலில் மிதப்பதைக் கண்டான். அவள் பேரில் இரக்கம் கொண்டு படகில் ஏற்றிப் போட்டுக்கொண்டான். அவள் அப்பொழுது உணர்வற்ற நிலையில் இருந்தாள். உயிர் இருக்கிறதா, இல்லையா என்று கூடக் கண்டு பிடிக்க இயலவில்லை. அங்கேயே படகைக் கரையேற்றப் பார்த்தும் முடியவில்லை. காற்று அடித்த திசையில் படகைச் செலுத்திக் கொண்டு போய்க் கடைசியில் திருமறைக்காடு என்னும் ஊர் அருகில் கரையை அடைந்தான். உணர்வற்ற அந்தப் பெண்ணைக் கரையில் தூக்கிக் கொண்டு வந்து போட்டுக் கவலையுடன் கவனித்துக் கொண்டிருந்த போது குதிரைகள் மேலேறிச் சில பெரிய மனிதர்கள் அப்பக்கம் வந்தார்கள். அவர்கள் உதவி செய்து அப்பெண்ணுக்கு உயிர் வருவித்தனர். ஆனால் அவள் பேசவும் இல்லை. மற்றவர்கள் பேசுவது அவள் காதில் விழுந்ததாகவும் தெரியவில்லை. "இவள் பிறவி ஊமைச் செவிடு" என்று அவர்களில் ஒருவர் கூறினார்: அவர்களின் தலைவராகத் தோன்றியவர் கருத்திருமனைத் தனியே அழைத்து ஒரு விந்தையான செய்தியைக் கூறினார். புயல் அடங்கியதும் அந்தப் பெண்ணை ஈழ நாட்டுக்கு அழைத்துச் சென்று அந்த நாட்டிலோ அல்லது அருகில் உள்ள தீவு ஒன்றிலோ விட்டு விட்டு வந்து விட வேண்டும் என்றும், அதற்காகப் பெரும் பணம் தருவதாகவும் அவர் சொன்னார். அதன்படியே கருத்திருமன் ஒப்புக் கொண்டு பணமும் பெற்றுக் கொண்டான். கடலில் கொந்தளிப்பு அடங்கியதும் அவளைப் படகில் ஏற்றி அழைத்துச் சென்றான். கடல் நடுவில் கட்டை ஒன்றைப் பிடித்துக் கொண்டு ஒருவன் மிதப்பதைக் கண்டான். மிகவும் களைத்துப் போயிருந்த அவனையும் படகில் ஏற்றிக் கொண்டான். முதலில் அந்தப் பெண் புதிய மனிதனைக் கண்டு மிரண்டாள். பிறகு, அவனைக் கவனியாமலிருந்தாள். இருவரையும் அழைத்துக் கொண்டுபோய் அவன் ஈழ நாட்டுக்கு அருகில் உள்ள ஒரு தீவில் இறக்கி விட்டான்.

அந்த தீவில் ஒரு பெரியவர் இருந்தார். அவர் இந்தப் பெண்ணைத் தமது மகள் என்று கூறினார். முன்னமே அவள் ஊமை என்றும், இப்போது தம்மைக் கூட அவள் அறிந்து கொள்ளவில்லையென்றும் கூறினார். பிறகு, அவளைக் கடலிலிருந்து காப்பாற்றியதைக் கருத்திருமன் சொன்னான்.

நடுக் கடலில் படகில் ஏறிய மனிதர் கருத்திருமனிடம் ஓர் ஓலை கொடுத்து அதை இலங்கை அரசனிடம் கொண்டு போய்க் கொடுக்கும்படி அனுப்பினார். அதிலிருந்து அவர் ரொம்பப் பெரிய மனிதராயிருக்க வேண்டுமென்று கருத்திருமன் தீர்மானித்துக் கொண்டான். இலங்கை மன்னனிடம் ஓலையைக் கொடுத்த பிறகு அவனுடைய பேச்சிலிருந்து தன்னால் காப்பாற்றப் பட்டவர் பாண்டிய நாட்டு அரசர் என்பதைத் தெரிந்து கொண்டான். பாண்டிய மன்னரை அழைத்து வருவதற்கு இலங்கை அரசர் பரிவாரங்களை அனுப்பினார். கருத்திருமன் மிக்க களைத்திருந்த படியால் அவர்களுடன் போகவில்லை. பாண்டிய அரசர் சில தினங்களுக்குப் பிறகு இலங்கை அரசரின் அரண்மனைக்கு வந்து சேர்ந்தார். இரு மன்னர்களும் சேர்ந்து இலங்கையின் தென் கோடியில் மலைகள் சூழ்ந்திருந்த ரோஹண நாட்டுக்குச் சென்றார்கள். அங்கே சில தினங்கள் தங்கியிருந்தார்கள். கருத்திருமன் பேரில் பிரியம் கொண்ட பாண்டிய மன்னர் அவனையும் தம்முடன் அழைத்துப் போனார். ரோஹண நாட்டில் பல இடங்களையும் இலங்கை அரசர் பாண்டிய மன்னருக்குக் காட்டினார். கடைசியாக, யாரும் எளிதில் நெருங்க முடியாத ஒரு பள்ளத் தாக்கிற்கு அழைத்துச் சென்றார். அங்கே ஒரு மலைக் குகையில் அளவில்லாத பொற்காசுகள், நவரத்தினங்கள், விலை

மதிப்பில்லாத ஆபரணங்கள் முதலியவை வைக்கப் பட்டிருந்தன. அவற்றையெல்லாம் பார்வையிட்ட பிறகு, இலங்கை அரசர் ஒரு தங்கப் பெட்டியை எடுத்துத் திறந்து காட்டினார். அதற்குள்ளே ஜாஜ்வல்யமாகப் பிரகாசித்த மணி மகுடம் ஒன்றும், இரத்தின ஹாரம் ஒன்றும் இருந்தன. அரசர்களுடைய சம்பாஷணையிலிருந்து அந்தக் கிரீடம் பாண்டிய வம்சத்து அரசர்களின் புராதனமான கிரீடம் என்றும், அந்த இரத்தின ஹாரம் பாண்டியகுல முதல்வனுக்குத் தேவேந்திரன் வழங்கியதாகச் சொல்லப் பட்ட ஹாரம் என்றும் தெரிந்து கொண்டான். அவற்றை எடுத்துக் கொண்டு போகும்படி இலங்கை அரசர் பாண்டியனை வற்புறுத்தினார். பாண்டிய மன்னர் மறுத்து விட்டார். சோழர்களை அடியோடு முறியடித்து விட்டு மதுரையில் தாம் முடி சூட்டிக் கொள்ளும் நாள் வரும்போது, இலங்கையின் அரசரே அவற்றை எடுத்துக் கொண்டு மதுரைக்கு வந்து உலகம் அறியத் தம்மிடம் அளிக்க வேண்டும் என்று கூறினார்.

பிறகு, பாண்டிய அரசர் கருத்திருமனிடம் அவன் எடுத்துப் போகக் கூடிய அளவு பொற்காசுகளைக் கொடுத்து அந்த ஊமைப் பெண்ணைப் பத்திரமாகப் பராமரிக்க ஏற்பாடு செய்து விட்டுத் திரும்பப் பாண்டிய நாட்டில் வந்து தம்முடன் சேர்ந்து கொள்ளும்படி அனுப்பினார்.

கருத்திருமன் பூதத்தீவுக்குச் சென்ற போது அங்கே அந்தப் பெண்ணைக் காணவில்லை. அவளுடைய தகப்பனையும் காணவில்லை. இருவரையும் தேடிக் கொண்டு கோடிக்கரைக்குப் போனான். அங்கே அந்த ஊமைப் பெண்ணைக் கண்டான். ஆனால் அவள் அவனைத் தெரிந்து கொள்ளவில்லை. அவளுடைய வீட்டாரிடமிருந்து சில விவரங்களைத் தெரிந்து கொண்டான். அவளுடைய தகப்பனார் உடல் நலிவுற்றபடியால் அவளை அழைத்துக் கொண்டு வந்து இங்கே விட்டு விட்டு உயிர் நீத்தார். கலங்கரை விளக்கின் காவலன் அவளுடைய சகோதரர் என்று தெரிந்தது. முதலில் அவளுக்குச் சகோதரன்—சகோதரி யாரையும் நினைவிருக்கவில்லை. மறுபடியும் ஒரு தடவை கால் தவறிக் கடலில் விழுந்து காப்பாற்றப்பட்ட பிறகு அவர்களையெல்லாம் அவளுக்கு நினைவு வந்தது. அவள் கர்ப்பவதியாயிருக்கிறாள் என்பதை மற்றவர்கள் தெரிந்து கொண்டார்கள். அதை அவளும் உணர்ந்து பெரும் பீதியில் ஆழ்ந்தாள். கோடிக்கரைக் குழகர் கோவிலுக்கு அடிக்கடி சென்று அங்கே கைங்கரியம் செய்து கொண்டிருந்தாள். கருத்திருமன் எவ்வளவுதான் முயன்றும் அவனை அவள் இப்போது கண்டு கொள்ளவில்லை.

கோடிக்கரையில் இருந்தபோது அந்த ஊமைப் பெண்ணின் தங்கையை அவன் சந்தித்தான். அவளும் ஊமை என்று அறிந்து அவள் பேரில் பரிதாபம் கொண்டான். அவளை மணந்து கொண்டு வாழவும் எண்ணினான். அதற்கு முன்னால் பாண்டிய மன்னரிடம் போய்த் தகவல் தெரிவித்து விட்டு வர விரும்பினான்.

இச் சமயத்தில் சோழ சக்கரவர்த்தி கண்டராதித்தரின் பட்டத்து அரசியும் சிவபக்தியில் சிறந்தவருமான செம்பியன் மாதேவி கோடிக்கரைக் குழகர் கோவிலுக்குச் சுவாமி தரிசனத்துக்கு வந்தார். அங்கே அந்த ஊமைப் பெண் மந்தாகினியைக் கண்டு அவளைத் தம்முடன் அழைத்துச் சென்றார். அவளுடன் அவள் தங்கை வாணியும் போய் விட்டாள்.

கருத்திருமன் பாண்டிய நாடு சென்றான். அங்கே பாண்டிய மன்னர் போர்க்களம் சென்றிருப்பதாக அறிந்தான். போர்க்களத்தில் சென்று பாண்டிய மன்னரைச் சந்தித்த போது, அவர் அவனை இலங்கைக்கு மீண்டும் போய் இலங்கை அரசனிடம் ஓலை கொடுத்து விட்டு வரும்படி கூறினார். திரும்பி வரும் போது மறுபடியும் அந்த ஊமைப் பெண்ணை அழைத்து வருவதற்கு ஒரு முயற்சி செய்யும்படியும் தெரிவித்தார்.

கருத்திருமன் இலங்கையிலிருந்து திரும்பிப் பழையாறைக்குச் சென்றான். வாணியின் நினைவு அவன் மனத்தை விட்டு அகலவில்லை. முக்கியமாக அவளைச் சந்திக்கும் ஆசையினாலே அவன் பழையாறைக்குப் போனான். ஆனால் அங்கே அவளைக் கண்டபோது அவன் திடுக்கிட்டுத் திகைத்துப் பிரமித்துப் பயங்கரமடையும்படி நேர்ந்தது. அருணோதய நேரத்தில் அவன் அரசலாற்றங்கரை வழியாகப் பழையாறையை நெருங்கிக் கொண்டிருந்தபோது, ஆற்றங்கரை ஓரத்தில் பெண் ஒருத்தி குனிந்து குழி தோண்டிக் கொண்டிருப்பதைக் கண்டான். அது கூட அவனுக்கு அவ்வளவு வியப்பளிக்கவில்லை. அவளுக்குப் பக்கத்தில் துணி மூட்டை ஒன்று கிடந்தது. அதற்குள்ளேயிருந்து ஒரு மிக மெல்லிய குரல், — சின்னஞ் சிறு குழந்தையின் அழுகைக் குரல் கேட்டது!

எந்தச் சண்டாளப் பாதகி உயிரோடு குழந்தையைப் புதைப்பதற்கு ஏற்பாடு செய்

## அருள்வாக்கு



ஸரியான காரணம் காட்டி க்ரிடிஸைஸ் செய்கிறதில் தப்பேயில்லை. விதண்டாவாத மாகப் பண்ணினால்தான் தப்பு. ந்யாயமான காரணங்கள், பாயின்ட்கள் தோன்றும் போது நாமும் மற்றவர்களை க்ரிடிஸைஸ் செய்ய வேண்டியதுதான். அதே மாதிரி அவர்களும் நம்மைச் செய்ய வேண்டியது தான்.

(கண்டனம் செய்வதில்) தப்பு இரண்டு விதத்தில்தான் இருக்கிறது. ஒன்று, ஸரியாகக் காரணம் காட்டாமல் விதண்டை பண்ணுவது. இன்னொன்று, நம் மனஸில் த்வேஷத்தோடு க்ரிடிஸைஸ் பண்ணப் போவது. மாற்று அபிப்ராயமுள்ளவர்களிடமும் த்வேஷம் என்பதேயில்லாமல் ப்ரேமையோடு, அபிப்பிராயங்களை மட்டும் க்ரிடிஸைஸ் செய்ய வேண்டும். 'அவர்கள் புத்திக்கு அப்படித் தோன்றுகிறது. நமக்குத் தோன்றுவதை அவர்களுக்கு எடுத்துச் சொல்வோம். அவர்களுக்குத் தோன்றுவதையும் கேட்டுக் கொள்வோம். இரண்டு பேரும் இரண்டையும் அலசி ஆலோசித்துப் பார்ப்போம்' என்ற மனோபாவத்தோடு நடக்க வேண்டும். இந்த ப்ரேமையில்தான் ஸமரஸம் இருக்க வேண்டுமே தவிரக் கொள்கையில் இல்லை. கொள்கையில் அப்படி (ஸமரஸம்) என்று சும்மாயிருந்தால், மற்றவர்கள் நம் தலையில் ஏறி உட்கார்ந்து கொண்டு நம்மை ஏமாந்த சோணகிரிகளாக்குவதில்தான் முடியும். மனஸில் அன்போடு, நமக்கு ஸத்யமாகத் தெரியும் கொள்கைகளுக்காகப் போராட வேண்டுமென்பதே முறை.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

கிறாள் என்ற ஆத்திர அருவருப்புடன் அவன் அருகில் நெருங்கியபோது, குழி தோண்டிய பெண் நிமிர்ந்தாள். அவள்தான் வாணி என்று கருத்திருமன் அறிந்து கொண்டான்.

"தம்பி! எனக்கு அப்போது எப்படி இருந்திருக்கும்? நீயே ஊகித்துக் கொள்!" என்றான் கரிய திருமால்.

"அதை ஊகித்துக் கொள்கிறேன். அப்புறம் கதையைச் சொல்!" என்றான் வந்தியத் தேவன்.

"அப்புறம் நடந்ததைச் சொல்ல இயலாது. அரச குலத்தைச் சேர்ந்தவர்கள் காதிலேதான் சொல்லலாம்! நான் மட்டும் அப்போது பழையாறைக்குப் போயிரா விட்டால் எனக்குப் பின்னால் நேர்ந்த கஷ்டங்கள் ஒன்றும் நேராமற் போயிருக்கும்!" என்றான் கருத்திருமன்.

"அப்படியானால், கிளம்பு! நேரே அரச குலத்தைச் சேர்ந்தவர்களிடம் போய்ச் சொல்லலாம்!" என்று கூறி நகைத்துக் கொண்டே வந்தியத் தேவன் அங்கிருந்து எழுந்தான்.

கருத்திருமனையும் அழைத்துக் கொண்டு பொக்கிஷ நிலவறையை அணுகினான். அங்கே அப்போது யாரும் இல்லை. நிலவறைக் கதவு பெரிய பூட்டினால் பூட்டப் பட்டிருந்தது. ஆனால் தெரியாதவர்கள் கண்டு பிடிக்க முடியாதபடி அமைக்கப் பட்டிருந்த அதன் உட்கதவை வந்தியத் தேவன் அழுத்தியதும் திறந்து கொண்டது. இருவரும் உள்ளே புகுந்து உட்புறம் தாளிட்டுக் கொண்டார்கள்.

வழியில் பொன்னும், மணியும், முத்தும், நவரத்தினங்களும் குவித்து வைத்திருந்த இடத்தில் வந்தியத் தேவன் பிரவேசித்தான். கருத்திருமனிடம், "உன்னுடைய ரோஹண நாட்டு மலைக் குகையில் இவ்வளவு செல்வங்கள் உண்டா?" என்று கேட்டான். "இதை விட நூறு மடங்கு உண்டு!" என்று சொன்னான் கரியதிருமால்.

வந்தியத் தேவன் சிலதங்கக் காசுகளை எடுத்து மடியில் வைத்துக் கட்டிக் கொண்டதும் மறுபடியும் கிளம்பினார்கள். நிலவறைப் பாதை வழியாக வந்தியத் தேவன் முன்னால் சென்றான். மதில் சுவரில் அமைந்திருந்த இரகசியக் கதவையும் திறந்தான். அங்கே இப்போது காவலன் யாரும் இருக்கவில்லை. வெளியிலே முதலில் தலையை மட்டும் நீட்டி எட்டிப் பார்த்தான். வடவாற்றில் வெள்ளம் இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு சென்றது. வெகு தூரத்தில் தீவர்த்தி வெளிச்சம் தெரிந்தது. அந்த இடத்தில் அருகாமையில் யாரும் இல்லை என்று தெரிந்து கொண்ட பிறகு வந்தியத் தேவன் வெளியே வந்தான். கருத்திருமனும் வந்த பிறகு கதவைச் சாத்தினான். வடவாற்றை எப்படிக் கடப்பது என்று யோசித்துக் கொண்டிருந்தபோது பக்கத்தில் சாய்ந்திருந்த மரத்தடியில் படகு ஒன்று மரத்தின் வேர்களில் மாட்டிக் கொண்டு நின்றது தெரிந்தது.

(தொடரும்)

உண்மை நிகழ்ச்சி:

# உயிர்காக்க ஓர் உபாயம்



அசைவற்றுக் கிடந்தாள் அந்த இருபத்து மூன்று வயதுப் பெண். ஒரு மாலை நேரத்தில் அவளை 'அள்ளிப் போட்டுக் கொண்டு' வருகிறார்கள். உறவுக்காரர்கள் என்று யாருமில்லாத பெண் அவள். எங்கோ ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை செய்து கொண்டு, பணிபுரியும் பெண்களுக்கான விடுதியொன்றில் தங்கியிருந்தவள் அவள். கொண்டு வந்தவர்கள் விடுதியில் அவளோடு இருந்த பெண்கள்தான்.

சர்வ சாதாரணமாக மூட்டைப் பூச்சி மருந்தைக் குடித்து விட்டிருக்கிறாள் என்பது சோதனையில் தெரிகிறது. வயிற்றைச் சுத்தம் செய்து, உணவு எச்சத்தைச் சோதனைக்கு அனுப்புகிறார்கள். அவர்கள் சந்தேகப்பட்டபடியே 'ஆர்கனோ பாஸ்படாஸ்' விஷக் கலவை ஆக்கிரமித்திருப்பது உறுதிப்படுகிறது.

உட்கொள்ளப்பட்ட விஷம், இரத்தக் குழாய்களில் நன்கு பரவி, மூச்சு விடக் கூடிய உறுப்புக்களின் தசைகளில் ஆக்கிரமித்துக் கொண்டு விட்டது. வேறு வழியே இல்லை என்கிற நிலையில் செயற்கை முறையில் அவள் மூச்சு விடுவதற்காக 'ரெஸ்பிரேடரில்' உடனடியாக இணைப்புத் தரப்படுகிறது. செயற்கைச் சுவாசம் நிகழ்கிற போது அவள் மெல்லக் கண்களை விழித்துப் பார்க்கிறாள். ஏதாவது ஒன்றிரண்டு வார்த்தைகள் பேசுகிறாள்.

இது 'போலீஸ் கேஸ்' என்கிற அளவில் காவல் துறைக்குத் தகவல் தருகிறார்கள். சட்ட விதிகளின்படி காவல் துறையினர் வருகிறார்கள். நீதிபதியும் வருகிறார். மரண நேர வாக்கு மூலம் பெற்றுப் பதிவு செய்து கொண்டு போகிறார்கள்.

மருத்துவர்களுக்கோ, அந்தப் பெண் இறந்து விடக் கூடாது என்கிற கவலை. அவளைக் காப்பாற்றப் பரபரக்கிறார்கள். அதே சமயத்தில் எப்படிக் காப்பாற்றுவது என்றும் குழம்புகிறார்கள்.

ரெஸ்பிரேடர் இணைப்பை அகற்றி விட்



● டாக்டர் சொக்கலிங்கம்

டால் அவள் இயக்கம் விழுந்து போகிறது. விஷம் இரத்தக் குழாய்களில் பரவி, சில என்ஸைம்களை அழித்து விடும் அபாயம் இருக்கிறது. விஷத்தின் இரசாயனப் பொருள்கள் இரத்தத்தை உயிரிழக்கச் செய்து விடும். என்ன செய்வது?

ஒரு நாள் இரண்டு நாள் இல்லை. ஆறு நாட்களாகி விட்டன. தேவகி மருத்துவ மனையின் தலைவர் டாக்டர் சொக்க லிங்கம், மயக்க மருந்து தரும் அனஸ்தடிஸ்ட், நரம்பியல் நிபுணர், மற்ற டாக்டர்கள் என்று ஒரு குழுவே அவளைக் கண் காணித்து வந்தது.

இப்படியே எவ்வளவு நாள் இந்தப் பெண் செயற்கைச் சுவாசத்தில் உயிர் வாழ முடியும்?

ஆறு நாட்களும் அமைதியின்றிக் கழிந்த நிலையில் —

ஒரு டாக்டர் சொன்னார்:

"ஒரு பரிசோதனையாகக் கொஞ்சம் புது இரத்தம் தந்து பார்த்தால் என்ன டாக்டர்?"

அதுவரை இது ஏன் யாருக்கும் தோன்ற வில்லை? டாக்டர்கள் கூடி ஆலோசிக்கிறார்கள். புது இரத்தம் கொடுத்துப் பார்க்கலாம் என்று முடிவாகிறது. அவளுடைய இரத்த வகை ஓ பாஸிடிவ்.

''யார் தருவது? பாருங்கள். அவள் குருப் ரத்தம் கிடைக்கவில்லையானால் என்னுடைய இரத்தத்தை எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடையது அந்த குருப்தான். சோதனையே வேண்டாம்'' என்கிறார் டாக்டர் சொக்கலிங்கம்.

'அதற்குத் தேவையிருக்கவில்லை. இரத்தம் கிடைத்துச் செலுத்தப்பட்டவுடன், அவளுடைய உடம்பில் புத்துணர்வு பரவுகிறது. கண் விழிக்கிறாள். பேசுகிறாள். 'மசால் தோசை வேண்டும். பழம் வேண்டும். பிஸ்கெட் வேண்டும்' என்று எதையெல்லாமோ கேட்கிறாள் அந்தப் பெண்.

முன்னைப் போலவே — ஆனால் உயிர் பற்றிய கவலை போய் விட்ட நிம்மதியில் தீவிர சிகிச்சை தொடர்கிறது. முழுமையான இயக்கம் பெற்று அந்தப் பெண் மருத்துவ மனை வளாகத்தைச் சுற்றி வந்து பார்த்து மகிழ்கிறாள். மகிழ்விக்கிறாள். இப்போதும் தொடர் சோதனைகளுக்காகப் புற நோயாளியாக வந்து கொண்டிருக்கிறாள்.

''நிகழ்ந்தது வெகு இயல்பானதுதான். புது இரத்தம் குழாய்களில் பாய்ந்த போது, செயலற்றிருந்த என்ஸைம்கள் உயிர் பெற்று விட்டன. நச்சுப் பொருட்கள் அழிந்து, இரத்த ஓட்டம் சீர்படத் தொடங்கியது. தற்செயலாகவும் ஒரு பரிசோதனை முயற்சியாகவும் செலுத்தப்பட்ட புது ரத்தமே மருந்தாக அமைந்து விட்டது. எங்களுக்கும் ஒரு புதிய பாடம். அந்தப் பெண் பிழைத்ததில் ஏகப்பட்ட சந்தோஷம்!'' என்கிறார் டாக்டர் சொக்கலிங்கம்.

— சுப்ர பாலன்

17

# வல்லமை தாராயோ?

**போ**லீஸ் ஸ்டேஷனுக்குள் அரவிந்த் அமைதியாக நடந்து வந்ததும், குனிந்து எழுதிக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் நிழலசைவில் உணர்ந்து நிமிர்ந்து பார்த்ததும், "குட் மார்னிங் சார், வாங்க" என்று தன்னிச்சையாக எழுந்து கொண்டார் ஏற்கெனவே அறிமுகமுள்ளவர் என்பதால்.

அருகில் மற்றொரு நாற்காலியில் கோபமான முகத்துடன் அமர்ந்திருந்த வந்தனாவைப் பார்த்து விட்டு, உடனே விழிகளைத் தாழ்த்திக் கொண்டான் அரவிந்த்.

"உக்காருங்க சார்."

அரவிந்த் சற்றுத் தள்ளி, தனியாக இருந்த நாற்காலியில் அமர்ந்தான். மின் விசிறி தாள நயத்துடன் சுழன்று கொண்டிருந்தது. மேஜையின் மேற்பரப்பின் ஓர் ஓரத்தில் டீ கிளாஸ் வைத்து வைத்து, வட்ட வட்டமாய் அழுக்கு இருந்தது. புதிய காலண்டரில் முருகன் ஆசீர்வதிக்க, தேதிகள் துடித்தன. ரூல் தடி பளபளவென்று டியூப்லைட்டைப் பிரதிபலித்தது. ஸ்டேஷனுக்குப் பின்புறம், மரத்தில் சிறுவர்கள் சப்தம் போட்டுக் கொண்டு கிளையில் அமர்ந்து காலாட்டிக் கொண்டிருப்பது தெரிந்தது. குப்பைத் தொட்டிக்குள் இன்ஸ்பெக்டரின் காலை டிபனின் மிச்சம் மந்தார இலை மத்தியில்.

இன்ஸ்பெக்டர் வல்லரசு மிகவும் தயங்கி, "சார், நான் ஒரு தடவைக்கு நாலு தடவை கேட்டுட்டேன். பிடிவாதமா புகார் எடுத்துக்கிட்டுத்தான் ஆகணும்னு இவங்க சொன்னாங்க. அதனால் எழுதி வாங்கினேன். இன்னும் என்ட்ரி போடலை. உங்க தரம், பழக்க வழக்கம் எல்லாம் எனக்குத் தெரியும். நீங்க அப்படிப்பட்டவர் இல்லை. ஆனா புகார்னு வந்துட்டதால விசாரிக்க வேண்டியது....."

"உங்க கடமைதான் சார். தப்பே இல்லை. நீங்க கூப்பிட்டு விட்டதோ, விசாரிக்கிறதோ நியாயம்தான். என்ன புகார் கொடுத்திருக்காங்க அவங்க?" என்றான் அரவிந்த் கைகளைக் கட்டிக் கொண்டு.

வந்தனாவுக்குள் சீற்றம் எழுந்தது. கட்டுப்படுத்திக் கொண்டாள். என்ன ஒரு நடிப்பு! இரவு காட்டுத்தனமாய் கத்திவிட்டு, இப்போது சாந்தசொரூபியாய்... வேஷக்காரன்!

"கசமுசான்னு என்னென்னவோ எழுதிருக்காங்க."

"பரவாயில்லை, சொல்லுங்க. அவங்க எதையும் பொய்யா எழுதியிருக்க மாட்டாங்கங்கிறது மட்டும் நிச்சயம்."

"நேத்து ராத்திரி அவங்க வேலை பார்க்கிற இடத்துக்கு போன் பண்ணி ஒரு பொய்யான தகவல் சொல்லி வரவழைச்சீங்களாம்."

"சார், நான் அப்போ ட்ரிங் சாப்பிட்டிருந்தேன். ஒரு பர்சனலான விஷயம் அவங்ககிட்டே உடனே பேசணும்னு விரும்பினேன். இது உண்மை. தப்பான தகவல் கொடுத்து வரவழைச்சது என் ஃப்ரண்டு கிருஷ்ணனோட வேலை. ஆனா அந்தக் குற்றச்சாட்டுக்கு நான் பொறுப்பெடுத்துக்கறேன்."

"அடுத்தது அவங்க உங்க ரூமுக்குள்ளே வந்ததும் வெளியேற முடியாதபடிக்குக் கதவைச் சாத்திப் பூட்டினீங்களாம்."

"நான் சொல்ல விரும்பினதைச் சொல்லி முடிக்கிற வரைக்கும் அவங்க வெளியே போகாம இருக்கணும்னு அப்படிச் செஞ்சேன். நோக்கம் எதுவா இருந்தாலும், அந்தக் குற்றச்சாட்டையும் நான் ஒத்துக்கறேன்."

"அப்புறம்... வந்து.... வந்து...."

"சொல்லுங்க இன்ஸ்பெக்டர் சார்."

"அப்புறம்... பலவந்தப் படுத்த முயற்சி செஞ்சி கட்டிப் பிடிச்சி உதட்ல வலுக்கட்டாயமா முத்தம் கொடுத்தீங்களாம்."

உதட்டைக் கடித்துக் கொண்டு மௌனமாக இருந்த அரவிந்த் நிமிர்ந்து, "இந்தக் குற்றச் சாட்டையும் நான் விளக்கம் சொல்லாம ஒப்புக்கறேன். இன்னும் ஏதாவது இருக்கா?"

"அவ்வளவுதான்."

"இன்ஸ்பெக்டர், இவ்வளவையும் ஒப்புக்கிட்ட நான் ஒண்ணே ஒண்ணு அழுத்தந்திருத்தமாச் சொல்லிடறேன். இவங்களை நான் நேசிக்கிறேன். ரொம்ப ரொம்ப நேசிக்கிறேன். நேத்து நான் நடந்துக்கிட்டதெல்லாம் முறை தவறின செயல்கள்தான். ஆனா என் லவ்வை வெளிப்படுத்தணும்னும், புரியவைக்கணும்னும், ஏத்துக்க வைக்கணும்னும் எதிர்பார்த்துச் செய்யப்

பட்டுக்கோட்டை பிரபாகர்



போலீஸ்: ஏம்பா, இப்படி காத்து இல்லாமல் போறியே, சைக்கிள் வீணாப் போயிடாதா?

இவர்: ஆமா சார்...!

போலீஸ்: சரி... ஒரு பத்து ரூபா மாமூல் எடு; அப்பத்தான் உனக்கு அடுத்த நடவையாவது பொறுப்பு வரும்!

— வி. ரேவதி.

பட்டவை. சத்தியமா மானபங்கப் படுத்தணும்னோ, கற்புக்குக் கேடு செய்யணும்னோ எனக்கு எண்ணம் இல்லை. இப்பவும் நான் இவங்களை மனப்பூர்வமா நேசிக்கிறேன். அதை இவங்க புரிஞ்சுக்காம போனது, இல்லை சரியாப் புரிய வைக்க முடியாமப் போனது என்னோட துரதிர்ஷ்டம். இவங்களோட புகாரை நீங்க ரெஜிஸ்தர் பண்ணிக்கலாம். இதுக்காக என் மேல என்ன நடவடிக்கை எடுக்கணுமோ எடுத்துக்கலாம். அரெஸ்ட் பண்ணணுமா, பண்ணிக்கங்க. லாக்கப்ல இருக்கணுமா, இருக்கேன். கோர்ட்டுக்கு வரணுமா, வர்றேன்." என்ற அரவிந்த், "எதிலயாவது கையெழுத்துப் போடணுமா, போடறேன்" என்று பாக்கெட்டில் இருந்து பேனாவை எடுத்துக் கொண்டான்.

வல்லரசு புன்னகை செய்தார். தொப்பியைக் கழற்றி விட்டுத் தம் தலைமுடியைக் கோதி விட்டுக் கொண்டார்.

"நினைச்சேன். இப்படித்தான் ஏதாச்சும் இருக்கும்னு. இது லவர்ஸ் ஊடல் பிரச்னையா? ஏம்மா, இதை முதல்லியே சொல்லக் கூடாதா?"

"நான்சென்ஸ்!" என்றாள் வந்தனா, "லவர்சுமில்லை, ஊடலுமில்லை. நான் சொல்வது சீரியஸ். நேத்து நடந்தது உங்களுக்குத் தெரியாது இன்ஸ்பெக்டர். திட்டம் போட்டு வம்பு செஞ்சுட்டு இப்ப என்னவோ சர்ச்ல பைபிள் படிக்கிற பாதிரியார் மாதிரி, பதவிசாப் பேசி நாடகமாடறார். ஒரு விஷயத்தை எதிர்க்கிறதை விட, ஒத்துக்கிறப்போ சீரியஸ்னெஸ் குறைஞ்சு போயிடும். அந்த டெக்னிக்கைத்தான் செய்றார் இவர்."

"இல்லைங்க வந்தனா, நான் சொல்றதைக் கொஞ்சம்...." என்று ஆரம்பித்த அரவிந்தை இடைமறித்தாள், "நோ! நான் உங்ககிட்டே பேச விரும்பலை. இன்ஸ்பெக்டர் சார், நான் கொடுத்திருக்கிற புகாரைப் பதிவு பண்ணிக்கப் போறீங்களா, இல்லையா?"

"இரும்மா. ரொம்பக் கொதிக்காதே. இது சின்ன விஷயமில்லை. கேஸ்னு பதிவு செஞ்சா பின் விளைவுகள் என்னன்னு யோசிக்கணும்மா. அதான் சொல்றாரே... உன் மேல உள்ள ஆசைல தப்பா நடந்துட்டேன்னு. பேசி ஒருத்தருக்கொருத்தர் காம்ப்ரமைஸ் ஆகறதுதான் இரண்டு பேருக்கும் நல்லது. அவர் ஸ்டேட்டசுக்கு இதை கேஸ் பண்ணா ரொம்ப அவமானம். வயசுப் பொண்ணு — உன் பேரும் தப்பா அடிபடும். இதெல்லாம் புரிஞ்சுக்காம பேசறியே."

"இது என்ன ஸ்டேஷனா, இல்லை கிராமத்துப்பஞ்சாயத்தா? புகார் கொடுத்தாப் பதிவு செஞ்சி நடவடிக்கை எடுக்க வேண்டியது உங்க கடமை."

"அதெல்லாம் யார் இல்லைங்கறது? நானும் மனுஷன்தானே? நியாயம், அநியாயம் தெரிஞ்சவன்தானே? ப்ராக்டிகலா உள்ள பிரச்னைகளைச் சொல்றேன். உனக்கு என்னம்மா வேணும்? அவர் கைப்பட ஒரு மன்னிப்பு லெட்டர் மாதிரி எழுதித்தரச் சொல்லட்டுமா?"

"தேவையில்லை. சட்டப்படி இந்தத் தப்புகளுக்கான தண்டனை அவருக்குக் கிடைச்சாப் போதும்."

இன்ஸ்பெக்டர் வல்லரசு பெருமூச்சு விட்டார். அரவிந்தைப் பார்த்தார்.

"சார், நான்தான் சொல்லிட்டேனே. எனக்கு எந்த அப்ஜெக்ஷனும் இல்லை. நான் தெரிஞ்ச ஆசாமியாச்சேன்னு பாக்க வேணாம் இன்ஸ்பெக்டர். புகாரைப் பதிவு செய்யலாம்னு சொன்னேனே..."

"இதப் பாரும்மா வந்தனா, இப்ப நீ பாதிக்கப் பட்ட ஆத்திரத்தில இருக்கே. எது சொன்னாலும் தப்பாத்தான் படும். சிந்திக்கிற புத்தி ஒளிஞ்சுக்கிட்டு சீறிப் பாயற புத்திதான் இப்ப முன்னாடி நிக்கிது. சாரை எனக்கு நல்லாவே தெரியும். இந்தப் புகாருக்குப் பயந்து எங்கயும் ஓடிட மாட்டார். இந்தப் புகார் என்கிட்டேயே இருக்கட்டும். ஒரு நாள் பூரா யோசிம்மா. கொஞ்சம் பதற்றம் தணிஞ்சு மனசு நிதானத்துக்கு வரும். நாளன்னைக்குக் காலைல வாம்மா. அப்பவும் இவர் மேல ஆக்ஷன் எடுத்தே ஆகணும்னு நீ தீர்மானமா இருந்தா, நிச்சயமா நான் இவரை அரெஸ்ட் பண்றேன். இவரும் குற்றத்தை மறுக்கலை. இதை நான் ஒரு போலீஸ்காரனாப் பேசலை. ஒரு வெல் விஷராப் பேசறேன்."

"யாரோட வெல்விஷரா?"

"உன்னோட வெல்விஷராத்தான்ம்மா."

வந்தனா படக்கென்று எழுந்து கொண்டாள். "நாளன்னைக்குக் காலைல வருவேன். அப்பவும் இதே தீர்மானத்திலதான் நிப்பேன். அதில மாற்றமே இருக்காது. நீங்க புகாரைப் பதிவு செஞ்சுக்கலைன்னா நான் கமிஷனர் ஆபீசுக்கே நேராப் போயிடுவேன்," என்றவள், வேகமாக எழுந்து சென்றாள்.

வல்லரசு அரவிந்த் பக்கம் பார்த்து, ''புயல் ஓய்ஞ்சா மாதிரி இருக்கு. இந்தப் பொண்ணையா லவ் பண்ணீங்க?'' என்றார்.

''இப்பவும்தான் சார் லவ் பண்றேன்.'' எழுந்து கொண்டான்.

''அதென்ன காதல் லாஜிக்கோ! எனக்குப் புரியலை, ஆனா மிஸ்டர் அரவிந்த் விஷயம் விளையாட்டானதில்லை. அந்தப் பொண்ணைச் சமாதானப்படுத்தப் பாருங்க. புகாரை ரெஜிஸ்தர் பண்ணினா... இது பெரிய விஷயம். இப்ப உங்க வெல்விஷராப் பேசலை, போலீஸ்காரனாச் சுட்டிக்காமிக்கிறேன்.''

''அந்தப் பொண்ணை மாதிரியே எந்த விளைவையும் ஏத்துக்கற தயார் நிலையை விட்டு மாறாம நானும் இருக்கேன் இன்ஸ்பெக்டர், வர்றேன்.''

அரவிந்த் வெளியேறியதும் வல்லரசு சப் – இன்ஸ்பெக்டரைப் பார்த்து, ''ரொம்ப சீரியஸான விஷயம். இவ்வளவு அசால்டா எடுத்துக்கிட்டுப் போறாரே,'' என்றார்.

''அந்தப் பொண்ணைச் சமாதானப்படுத்திடலாங்கிற நம்பிக்கைலதான் அப்படிப் பேசிட்டுப் போறார். கேஸ் போடற வரைக்கும் விட்டுடுவாரா என்ன? பேர் என்னாகறது? காறித் துப்பற விஷயமில்லையா இது! நாளைக்கு இவர் ஆபீஸ்ல எவனாச்சும் மதிப்பானா? எல்லாம் ட்ராமான்னு தான் எனக்குப் படுது, லவ் ட்ராமா.''

''இவங்க ட்ராமா பண்றதுக்கு நம்ம ஸ்டேஷன்தான் கிடைச்சுதா?'' என்று ஒலித்த போனை எடுத்தார் வல்லரசு.

வெளியே வந்த அரவிந்த் பஸ் ஸ்டாண்டில் காத்திருந்த வந்தனா அருகில் வந்து நின்றான்.

''வந்தனா'' என்றான். இவன் யாரோ என்பது போல் கவனிக்காதது போல நின்றாள்.

''நீ புகாரை வாபஸ் வாங்கிக்கோன்னு சொல்றதுக்காக இப்ப வரலை வந்



தனா. இந்தத் துணிச்சலும், இந்த ரோஷமும், இந்தப் புலிக்குணமும் எனக்கு இன்னும், இன்னும் அன்பைத் தூண்டத்தான் செய்யுது. ஸ்டில் ஐ லவ் யூ. நீ என்ன நடவடிக்கை எடுத்தாலும் சரி, எனக்கு என்ன தண்டனை கிடைச்சாலும் சரி, இது மாறாது. இன்னும் அதிகமா நேசிப்பேன். உன் மேலே கோபம் மட்டும் வரவே வராது. நீ என்னை, என் அன்பைப் புரிஞ்சுக்கிறதுக்காகத் தவமிருப்பேன். புரிய வைக்கிறதுக்காகக் கடைசி வரைக்கும் முயற்சி செஞ்சுக்கிட்டுத்தான் இருப்பேன். நீ எந்த முடிவு வேணும்னாலும் எடு. ஆனா டோண்ட் ஹேட் மீ ப்ளீஸ்...''

அரவிந்த் மெல்லிய குரலில் இவ்வளவும் சொல்லிவிட்டு அருகில் நின்ற ஆட்டோவில் ஏறிக் கொண்டு சென்றதும், திகைத்து நின்றாள் வந்தனா.

என்ன கேரக்டர் இவன்! இந்தக் கெஞ்சு கெஞ்சுகிறானே! யாசித்து வருவதா காதல்?. இதே விஷயத்தைத்தான் நேற்று முரட்டுத் தனமாக வலியுறுத்தினான். இந்த உருக்கம் உண்மையான முகமா, இல்லை முரட்டுத் தனம் உண்மையான முகமா? எது நிஜம்? எது வேஷம்?

நேற்றையது நிஜம். அதைப் பொய்யாக்க இன்றையது வேஷம்! எதிரியை மோதிச் சமாளித்தல் ஒரு வகை. பணிந்து சமாளித்தல் ஒருவகை. ஆக இதுவும் ஒரு சமாளித்தல்தான். அப்படியும் எதிரிதான்.

பஸ் பிடித்து இறங்கி, குழப்பத்துடன் நடந்து தன் வீட்டிற்கு வந்தபோது, ''நில்லுடி. நீ போலீஸ் ஸ்டேஷன் போனது தெரியும். நான் என்ன சொல்லிட்டு வந்தேன்? என் வார்த்தையை மீறிட்டு இப்போ வீட்டுப் படியை மிதிக்க உனக்கு வெக்கமா இல்லை!'' என்றாள் அம்மா காட்டமாக.

''உள்ளே வாம்மா. எதுவா இருந்தாலும் அப்புறம் பேசிக்கலாம்'' என்றான் கோபி.

''என் வார்த்தையைக் கேக்காதவளுக்கு இங்கே என்னடா வேலை?''

''இப்ப என்ன நடந்துடிச்சிம்மா?'' என்றான் கோபி.

''மானமே போகப் போகுது. கை காட்டிக் கைகாட்டிப் பேசப்போறாங்க. ஒரு குடும்பத்துக்கு வேற என்ன கேவலம் வேணும்?''

வந்தனா அமைதியாக உள்ளே வந்து தன் அறைக்குச் சென்று சூட்கேஸ் எடுத்து, உடைகளை, புத்தகங்களை அடுக்கிக் கொண்டே, ''என்னால எந்தக் கேவலமும் வேணாம். எனக்குச் சரின்னு பட்டபடிதான் நான் நடப்பேன். அதுக்கு அனுமதி கிடைக்காத வீட்ல இருந்துக்கிட்டுத் தினம் மோதிக்கிட்டு இருக்க வேணாம். நான் போய்ட்றேன்'' என்றாள் உறுதியாக.

(தொடரும்)

---

## கவிதைக்குள் ஒரு கவிதை:



அவள் இல்லாத வெறுமை!

''நீரோடு கோலங்காணா
நிலைப்படியும்
நெளிந்தாடும் சேலையில்லாத்
துணிக்கொடியும்,
மலரவிட்டுத் தரை உதிர்க்கும்
பூச்செடியும்
கிணற்றடியும், வாளியும்,
கைப்பிடிச் சுவரும்
வறளுகின்றன என்னைப்போல்—
அவளில்லா வெறுமையால்.''

எப்போதோ படித்த பாலகுமாரனின் கவிதை. எதில் படித்தேன் என்பது நினைவில்லை. மனைவி, சகோதரி, தாய் — யாராகவும் இருக்கலாம். ஒரு பெண்ணின் பிரிவை மிக அற்புதமாகச் சொல்லியிருக்கிறார்.

அவள் வீட்டிலிருந்தால் நிலைப்படி கழுவிக் கோலமிடுவாள். அவள் உடுத்தும் சேலைகள் கொடி முழுக்கக் கிடந்து அவளின் மணத்தைப் பரப்பும். அவள் தினமும் எழுந்து நீராடிப் பூப்பறிப்பாள்.

அவள் இல்லாததால் கிணறு புழங்காமல் கிடக்கிறது. பூக்கள் பறிப்பாரின்றித் தரையில் உதிர்ந்து கிடக்கின்றன. அவளைப் பிரிந்ததால் ஏற்பட்ட துயரைத் தன்னைப் போலவே அந்த நிலைப்படியும், கொடிக் கயிறும், கிணறும், செடியும் — ஏன், கைப்பிடிச் சுவர் கூட எதிரொலிப்பதாய்ச் சொல்லி அந்தச் சூழ்நிலையையே நம தாக்கி விடுகிறார்!

அஃறிணைப் பொருள்களின் வேதனையைச் சொல்லி, 'அவளில்லாமல் நானும் அவற்றைப் போலவே சோபை மிழந்து கிடக்கிறேன்' என்று நயம்படச் சொல்கிறார்.

இந்தப் பிரிவு தாற்காலிகமா, நிரந்தரமா என்பதும் பாடலில் தெரியவில்லை. எவ்வாறாயினும் அந்தப் பெண் வீட்டில் இருக்கும் போது உள்ள சூழ்நிலை, இல்லாதபோது உள்ள சூழ்நிலை இரண்டுமே நம் கண் முன்னே தோன்றி, நம்மை ஒரே சமயத்தில் மகிழ்விக்கவும், வாட்டி வதைக்கவும் செய்கின்றன.

ஒவ்வோர் ஆணுக்கும் இந்த அனுபவம் ஏதேனும் ஒரு சமயம் நிச்சயம் கிட்டியிருக்கும்.

என் மனத்தில் நிற்கும் பசுமையான கவிதைகளில் இதுவும் ஒன்று.

— க. அன்பழகன், சேத்தூர்.

## நீங்கள் அலுவலகத்திலிருந்து ஓய்வு பெறும் நாளன்று உங்கள் மனைவியின் முகத்தைப் பார்த்து. ''நமது வாழ்க்கை இனிமேலும் வசதியாகவே இருக்கும்'' என்று கூற முடியுமா ?

எல்.ஐ.சியின். பென்சன் திட்டங்களான ஜீவன் தாரா மற்றும் ஜீவன் அக்ஷய நீங்கள் ஓய்வு பெற்ற பின்னும் உங்களுக்கு முறையான வருமானத்தை உறுதியளிக்கின்றன. அது மட்டுமல்ல ! உங்களுக்கு வருமான வரிச் சலுகைகளும் உண்டு. இன்றே ஒரு பாலிசி வாங்கி உங்கள் வளமான எதிர்காலத்திற்கு வழி செய்திடுவீர்.)

---

### உத்தியோக ஓய்வு ஒரு மறுக்க முடியாத உண்மை.

---



**லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா**

CLARION C-LIC-7

# சுயம்

இப்போதுதான் டிரைவர் தட்டி எழுப்பிவிட்டுப் போயிருக்கிறார்.

சீனிவாசனுக்குள் இன்னும் சுருண்டு படுத்துக் கொள்கிற உறக்கம். கண்ணிமைகளை விலக்க மனசில்லை. இமைகளின் உட்பகுதியில் திகுதிகுவெனக் காந்தல். இன்னும் கொஞ்ச நேரம் தூக்க சுகத்துக்கு ஏங்கித் தவிக்கிற உடம்பு. தை மாதப் பனி தரையைத் துளைக்கிறது. நெஞ்சுக்குள் முகம் புதைத்துச் சுருட்டி முடங்கிக் கொள்ள ஏங்க வைக்கிற பனி.

ஊஹூம்! மணியைப் பார்த்தான். 5.13.

இன்னும் டீ குடிக்கணும். பாத்ரூம் போகணும். டிரஸ் மாத்தணும். கண்ணாடி பார்த்துத் தலைசீவணும். கையெழுத்துப் போட்டு, கணக்குப் பார்த்து, டிக்கெட் கட்டுகளை வாங்கணும். இன்வாய்ஸ் பேப்பர் வாங்கணும், 5.30க்கெல்லாம் டிப்போவை விட்டு பஸ்ஸை நகர்த்தியாகணும்.

5.40க்கு பஸ் நிலையத்தில் டயமெடுத்தாகணும்.

துரிதப்படுத்தி நிர்ப்பந்தப் படுத்துகிற தொழில். மடங்க மறுத்து அடம் பிடிக்கிற மனசை வசக்குகிற தொழில். மனசின் விருப்பங்களைக் காலில் போட்டு மிதித்து, மனிதனை மெஷினாகச் சிறுமைப்படுத்துகிற கண்டக்டர் உத்தியோகக் கண்டிஷன்.

மனசெல்லாம் நெருஞ்சி முட்கள். உறுத்தி வலியெடுக்க வைக்கிற கூரிய முட்கள்.

ராவும் பகலுமாய்க் கனத்த கனத்த புத்தகங்களைத் தூக்கி வைத்துக் கொண்டு, உற்று உற்றுப் படித்து, மால்தஸ்ஸையும், ராபர்ட் ஓவனையும் இன்னும் பிற பொருளாதார அறிஞர்களின் சிக்கலான எக்னாமிக்ஸ் தியரிகளைக் கரைத்துக் குடித்து... வாங்கிய பி.ஏ. என்கிற இரண்டெழுத்திற்கு என்ன அர்த்தம்? என்ன கௌரவம்? கண்டக்டர் உத்யோகம் தானா, அதற்கான அந்தஸ்து?

காக்கிச் சட்டை போட்டுக் கொண்டு, எச்சிலைத் தொட்டு டிக்கட் கிழிக்கிற தொழிலா? புலிகுப் பூனைக்கு எலிபிடிக்கிற உத்தியோகமா? லாண்டிரிக் கடையில் அழுக்குத் துணிக்கணக்கு எழுதுகிற காரியத்திற்கு ஒரு கவிஞனா?

வருஷங்களையும் வாலிபத்தையும் அள்ளி விழுங்கிக் கொண்ட படிப்புக்குரிய உத்தியோகம் கிடைத்திருந்தால்......

ஏழு மணிவரை உறங்கலாம். மழலையோடு விளையாடி மகிழ்ந்து, மனைவியோடு பேசி மகிழலாம். ஆற அமரக்குளித்து, பேப்பர் படித்து விட்டு, மனசைக் குளிர்ச்சிப் படுத்துகிற குறும்புகளோடு, கொஞ்சுகிற சந்தோஷத்தோடு டிபன் முடித்துவிட்டு, பத்து மணிக்கு ஆபீஸ் போய், ஐந்து மணிக்கு வீடுதிரும்பி.....

ஹூம்.... எல்லாம் பாழ்! வாங்கிய பட்டம் பொருட்படுத்தப்படவில்லை. பி.ஏ. கண்டுகொள்ளப் படவில்லை.

"என்னப்பா சீனி, இன்னும் எந்திருக்கலியா? காலேஜ் ஆஸ்டல் இல்லேப்பா... இது பஸ் டிப்போ."

டிரைவர்தான். பனியனை உள்ளே தள்ளிக் காக்கி பேண்ட் கொக்கிகளை மாட்டிக் கொண்டிருந்தார். படுத்த நிலையிலேயே இவன் கால்களை நீட்டினான். உடம்பை நிமிர்த்தினான். விறைத்தான். நெட்டி முறித்து அலுப்பை உதறி விட்டு எழுந்தான். முகம் கழுவித் துடைத்துவிட்டு, டீ குடிக்க கேண்டீனுக்குள் நுழைந்தான்.

பஸ் நிலையத்திலிருந்து 5.40க்கு பஸ் புறப்பட்டது. பனியின் ஊசிப் பாய்ச்சல். எலும்பு வரை ஊடுருவிப் பாய்ந்து நடுங்க வைக்கிற தைமாதப் பனி.

ஏழு மணி நெருங்கிக் கொண்டிருக்கையில், ஆமர்நாடு நெருங்கிக் கொண்டிருந்தது. இதுதான், இந்தப் பஸ்ஸின் எல்லை.

"என்ன சீனி, டிபனுக்கு ராசபாளையம் போயிருவமா?"

"இங்கேயே முடிச்சிருவோம். சட்னி சாம்பார் டேஸ்டாயிருக்கும், நம்ம வீட்லே மாதிரி."

அந்தச் சின்ன ஓட்டலுக்குள் நுழைந்தனர். தடபுடலாய் வரவேற்பு. உபசரிப்பு. ஓடி ஓடிக் கவனிக்கிற கடைக்காரர்.

திருப்தியுடன் டிபன் முடித்துவிட்டு, சிகரெட் பற்றவைத்தான். சீனி, புகையை ஊதிக் கொண்டே தினசரிப் பத்திரிக்கைகளில் பருவட்டாக ஒரு மேய்ச்சல். அடிக்கடி கைக்கடிகாரத்தைக் கவனித்துக் கொண்டான்.

'வேலை கிடைக்காமல் பட்டதாரி வாலிபர் தற்கொலை' என்ற செய்தி அதிர்வுடன் இவன் கவனத்தைச் சுண்டியிழுக்க, சிற்றெறும்பு எழுத்துக்களைக் கூர்ந்து வாசித்தான். முடிப்பதற்குள்...

உயிர் பெற்று உறுமுகிற பஸ்ஸின் சத்தம். திடுக்கிட்டு நிமிர்ந்தான். டிரைவர் கையசைத்துக் கூப்பிடுவது கண்ணாடி வழியாக மங்கலாய்த் தெரிந்தது. நிமிர்ந்த இவன் விழிகளில் வெளிப்படையான கண்டனம்.

மேலாண்மை பொன்னுச்சாமி

கண்டக்டர் விசிலடிக்காமல், டிரைவர் எப்படி வண்டியை ஸ்டார்ட் பண்ணலாம்? இது, அலட்சியம். கண்டக்டரை பொருட்படுத்தாததுடுக்குத்தனம். டிரைவரை போய்ச் சத்தம் போடலாமா?

'லகானைப் பிடி. கண்டியிழுத்துக் கட்டுப்படுத்து. உணர்ச்சிகளை வார்த்தைகளாய்ச் சிதறிவிடாதே. வார்த்தைகள் காயப்படுத்தும். பிறரைமட்டுமல்ல, உன்னையும்தான்! சீனி, சாந்தமாகு. அமைதிகொள்!

சமாளித்துக் கொண்டு அவசரமாய் ஓடி வந்து பஸ்ஸில், ஏறினான். விசிலடிக்க நினைப்பதற்குள் —

''கண்டக்டர் ஏறிட்டாரு. போகலாம்'' ஏதோ ஒரு பயணியின் சப்தத்தில் வண்டி நகர... சீனி உள்ளுக்குள் ஊனப்பட்டான். இப்போதும் அலட்சியப்படுத்தப்பட்ட உணர்வு. அந்து மீறலுக்கானான நமைச்சல்.

**வ**ண்டி ஃபுல்லாகியிருந்தது. இரண்டு ஹைஸ்கூல் பையன்கள் ஸ்டாண்டிங்கில். விறுவிறுவென டிக்கெட் கொடுத்தான்.

''ரெண்டு தொண்ணூறு குடுங்க.''

''ஒண்ணு அம்பது ஒண்ணு.''

''நாலு ராசபாளையம்.''

''அய்யனாபுரம் ஸ்டாப். ஒண்ணு எழுபது குடுங்க.''

''ஆலங்குளம் முக்கு ரோடுக்கு. ஒரு ரூபாய் ஒண்ணு.''

ஸ்கூல் போகிற பெண்கள் மிகத் துல்லியமாய்ச் சில்லறை தந்து, ஒரு வார்த்தை கூடச் சிந்தாமல் டிக்கெட் வாங்கினர். சில பையன்கள் மௌனமாய் பாஸ்புக்கை நீட்டினர்.



## க்யூ இரண்டு; கவுண்ட்டர் ஒன்று!

**காயல்பட்டினம், முஸ்லிம்கள் பெரும்பான்மை பெற்ற ஊர். இங்கு இந்தியன் ஓவர்சீஸ் வங்கியில், பெண்கள் உள்ளே செல்லத் தனிப் பகுதி. ஆண்கள் உள்ளே செல்லத் தனிப் பகுதி.**

**உள்ளே இரண்டாகத் தடுத்து ஒரு பகுதியிலுள்ளவாடிக்கையாளர்கள் மறுபகுதியிலுள்ளவர்களைப் பார்க்க முடியாதபடி அமைத்துள்ளார்கள்.**

**மையத்தில் ஒரு கவுண்ட்டர். அதில் இந்து அல்லது கிறித்துவப் பெண் பணியாளர் ஒருவர் அமர்ந்து கொண்டு இடமும் வலமுமாக ஆண்களுக்கும் பெண்களுக்கும் பணம் பட்டுவாடா செய்கிறார்!**

**— கைலாஸ்.**

இவனுக்குச் சலிப்பாக இருந்தது. மனத்தில் ஒட்டாமல் வேலையின் தரம் விலகி, விலகி ஓடுவது போலிருந்தது.

என்ன இது! சகலத்தையும் அவர்களே தீர்மானித்து முடித்து விட்டனர். பழக்கப்பட்ட ரூட்டில்... பழகிப் போன பயணிகள். கண்டக்டர் என்கிற இவனது அதிகாரத்தை, தேவையை, பிடுங்கிக் கொண்டு, அவர்களாகப் பகிர்ந்து கொண்ட மாதிரி... ஓர் இழப்புணர்வு. இவன் தீர்மானிப்பதற்கும், இவனிடம் கேட்டுத் தெரிந்து கொள்வதற்கும் ஒன்றுமில்லாமல் போய் விட்ட ஒரு வெறுமை.

சீட்டுக் கிழித்துக் கொடுக்கிற மிஷினாக, தன் தரம் தாழ்த்தப்பட்டு விட்டதைப் போல, மனசுக்குள் மெல்லிய அவமதிப்பு...

பஸ் முழுக்கச் சலசலப்பு. பேச்சு சப்தம். அவரவர் கதைகள்; அவர்களுக்குள் பரஸ்பரமாய்க் கிண்டல்கள், சிரிப்புகள். இவனிடம் பேசுவதற்கும் விசாரிப்பதற்கும் ஒருவருக்கும் எந்தத் தேவையும் இருப்பதாகத் தெரியவில்லை.

சப்பென்றிருந்தது.

அவசரமாய் 'இன்வாய்ஸ்' குறித்துக் கொண்டான்.

அடுத்த ஸ்டாப்பில் ஏறிய கிராமத்துப் பெண்கள். அவர்களுக்குக் கூட இவனிடம் விசாரித்து அறிந்து கொள்ள ஒன்றுமில்லை. இவனை ஒரு மனிதனாக அல்ல... கண்டக்டர் என்பதாகக் கூட பொருட்படுத்திக் கொள்ளவில்லை.

இவனுள் ஏதோ ஒன்று குமுறிக் கொண்டிருந்தது. நிதானத்தைச் சலனப்படுத்துகிற நமைச்சல். முகத்தைச் சிடுசிடுப்பாக்குகிற உள் குமைச்சல்.

ஸ்டாப்களில் கூட, விசிலடிப்பதற்கு முன்பே பிரேக் போட்டு விடுகிற டிரைவர், எந்த நிறுத்தத்தில் இறக்கம் இருக்கும், இருக்காது என்பதெல்லாம், அனுபவப்பட்ட அவருக்கு அத்துப்படி.

சைடு கண்ணாடியில் பார்த்தே... ஏறுபவர்களையும், இறங்குபவர்களையும் கண்காணித்து.... விசிலுக்கு முன்பே நகர்த்தி விடுகிறார்.

நான் எதுக்கு? கண்டக்டர்ங்கிறவன் எதுக்காக? அவனுக்கு என்ன அதிகாரம்? ஒண்ணுமில்லையா? அவன் அவசியமில்லையா? நான் ஒரு மனுசன். மனுசன்ங்கிற அர்த்தத்துலே மதிக்காட்டாலும் பரவாயில்லே... கண்டக்டர்ங்கிற தொழிலையாச்சும் பொருட்படுத்த வேண்டாமா?

தனது இருப்பின் அவசியமின்மையை உணர்கிற கணங்கள் கொடியவை.

மனசு படபடத்தது. முகம் சிவக்கிற கோபக் கங்கு. அனல் பரத்துகிற நினைவுகள். 'யார் மீது பாயலாம், குதறிப் பிடுங்கலாம்' என்று பம்மிப் பதுங்குகிற அளவுக்கு, நிறம் மாறுகிற மனசு.

'பல்லைக் கடி. மனசைக் கட்டுப்படுத்து. பொருட்படுத்தா விட்டாலும்... நீ கண்டக்டர்தான். மதிக்கா விட்டாலும் கூட... நீ உனக்கு மனிதன்தான். உணர். ஆற அமர யோசி. யோசனையின் நீட்சியில் வெம்மையைத் தணி. சீனி, நீ மனிதன்... மனிதன்...'

யோசிக்கத் திராணியற்ற மனசு, அடங்க மறுத்துத் திமிறுகிறது. பாயத் துடிக்கிறது.

பஸ் ஆலங்குளம் கடந்து போனது.

"ஒரு ராசபாளையம் குடுங்க." — பத்து ரூபாய் நோட்டை ஒரு வெள்ளைச் சட்டை நீட்டியது.

"சில்லறை இல்லியா?"

இவனையும் மீறி வெளிப்படுகிற கடுப்பு குரலில். இவனுக்கே அனாவசியம் என்று தோன்றுகிற கடுப்பு.

"இல்லே."

"இல்லாம எதுக்காக வண்டியிலே ஏறுனீக? உசுரை வாங்குறதுக்கா?"

எதிர்த் திசையிலிருந்து கோபம் கிளம்பவில்லை. சிரிக்கிறார். பெருந்தன்மையான புன்னகை. ரொம்பச் சகஜமாகச் சொல்கிறார்.

"டிக்கெட் மட்டும் குடுங்க. ராசபாளையத்துலே வந்து மிச்சத்தை வாங்கிக்கிடுறேன், சார். நம்ம துட்டு ஓடியா போயிடும்?"

சீனிக்குச் சப்பென்று ஆகிவிட்டது. கண்டக்டர் என்கிற தோரணையைக் காட்டுவதற்குக் கிடைத்த சிறிய வாய்ப்பையும், புன்னகையால் தட்டிப் பறித்து விட்டான், பாவி!

**சி**ங்கம்புட்டியைக் கடந்து, அய்யனாபுரத்தில் ஆட்களை உதிர்த்து விட்டு, டிக்கெட்களை ஏற்றி விட்டு பஸ் நகர்ந்தது. சீனி, டிரைவர் பக்கத்தில் நின்று 'இன்வாய்ஸ்' எழுதிக் கொண்டிருந்தான்.

ஸ்டாப்பிங் இல்லாத ஓர் இடத்தில் பட்டிக்காட்டுக் கிழவர் கையை நீட்டினார். அவர் காலடியில் ரெண்டு சிறுசுகள். அதில் ஒரு சிறுவனுக்குப் புது மொட்டை போட்டிருந்தது.

என்ன நினைத்தாரோ... டிரைவர் நிறுத்

தினார். சட்டையில்லாத அந்தக் கிழவர் பின்வாசலில் சிறுசுகளை ஏற்றி விட்டு, அவரும் ஏறினார். சிரமப்பட்டுத் தள்ளாடினார். சிறுசுகளைப் பாதுகாப்பாத நிறுத்துவதிலேயே சிரத்தை காட்டினார்.

இவனுள் திகுதிகுவெனப் பற்றிக் கொண்டு எரிந்தது. பின்வாசலில் ஏறிக் கொண்ட கிழடு. இந்தக் கூட்டத்தில் முண்டியடித்துக் கொண்டு, நீந்திப் பின்னால் சென்றாக வேண்டிய அனாவசியச் சிரமம் இவனுக்கு. ச்சே!

'ஸ்டாப்பிங் இல்லாத இடத்துலே நின்னு கையைக் காட்டுனதுக்குக் கடிச்சுக் குதறிடணும். அந்த மொட்டைக்கும் ஒரு டிக்கெட்டை போட்டுத் தீட்டிரணும். விடக் கூடாது. இப்பவாச்சும் கண்டக்டர் இருக்கிறதை உணர்த்திடணும்...

'பாவம்டா! சீனி... தப்புச் செய்யாதே!' உள்ளுக்குள் ஒலித்த குரலைப் புறம் தள்ளினான். நீந்தி நெளிந்து பின்னால் ஊர்ந்தான்.

இவன் வருவதை எதிர்பார்த்து அந்தப் பெரியவர். இவன் முகத்திலேயே அவரது பார்வை. பார்வையில், பிடிபட்டுப் போன பறவையின் பரிதாபம். கருணையை எதிர்பார்க்கிற அறியாமை.

''ஐயா... ராசபாளையத்துக்கு டிக்கட் எம்புட்டைய்யா?''

பாலைவனத்தில் ஒரு நீரூற்று. முதல் குரல். கண்டக்டர் இருப்பைப் பொருட்படுத்திய குரல். இவனது இருப்பை இவனுக்கே உணர்த்திய அசலான குரல்.

மனசெல்லாம் பாய்ந்து பரவுகிற குளிர்ச்சியின் இதம்.

''தொண்ணூறு பைசா.''

ரெண்டு ரூபாய்த் தாளை நடுக்கத்துடன் நீட்டினார்.

''இந்தப் புள்ளைக தகப்பனைப் பறிகுடுத்துட்டுக் கதியத்து நிக்குதுக. எம் பேரப் புள்ளைக. வளர்க்கிறதுக்காகக் கூட்டிட்டுப் போறேன். இதுகளுக்கும் டிக்கட் போடணுமாய்யா? போடணும்னா... போட்டுக்கங்க.''

இவனுள் சிலீரெனப் பாய்கிற குளிர்ச்சி மின்னல்! சகல சாளரங்களும் அகலத் திறந்து கொண்டன. உள்ளுக்குள் குப்பென்று காற்றும் ஒளியும் புகுந்து... மனசே பூரிப்பும் பெருமிதமுமாய்த் ததும்ப...

கண்டக்டராக மட்டுமல்ல... அதற்கும் அப்பால்... இவனை ஒரு மனிதனாகவும் பொருட்படுத்தி விட்டார். இரக்கப்பட உரிமையுள்ள மனிதனாக... சீனிவாசன் என்கிற தனித்துவ சுயமாக... சுயமான மனிதனாக...

தலையில் கிரீடம் வைத்த மாதிரி.... பயணிகள் மத்தியில் இவனுக்கு மாலை போட்டு கௌரவித்த மாதிரி.... ஒரு பிரமை!

சீனியின் கடைக் கண் ஓரங்களில் ஈர மினுமினுப்பு.

''பையனுக்கு டிக்கட் வேண்டாமய்யா. கம்பியை நல்லாப் பிடிச்சுக்கோங்க.''

அவனை அவனே தரிசித்து விட்ட உள் மனக் கும்மாளம். வார்த்தைகளில் பிடிபடாத சந்தோஷமும் திருப்தியும் மனசைத் தத்தளிக்கச் செய்ய.... இன்வாய்ஸ் எழுதினான்.

# காவலுக்குக் கெட்டிக்காரன்



அனாதி காலமாய் அரைபட்டு வரும் மாவுதான். பசுத்தோல் போர்த்திய புலியாய், கள்ளச்சாராயத் தயாரிப்பு, சிலை கடத்தல் — இன்னபிற சமூக விரோதச் செயல்களுடன் ஊரை அடித்து உலையில் போட்டு, அரசு இயந்திரங்களையெல்லாம் வசப்படுத்திக் கொண்டு, 'அடேய், நான் ஆளப்பிறந்தவன்டா,' என்று தனிக்காட்டு ராஜ தர்பார் நடத்தும் பண்ணையாரிடம், 'நான் அடக்கப் பிறந்தவன்,' என்று சவால் விட்டு வெற்றி காணும் ஒரு காவலன் கதை. இதிலே கொஞ்சம் போல் வித்தியாசம் காட்டுவது — பயந்தாங்கொள்ளியாய் இருந்தது, எப்படிப் பாயும் புலியாய் மாறிற்று என்ற பாத்திரப் படைப்பு.

ஓய்வு பெற்ற ஏட் வி. கே. ஆர். போட்ட மாலையைக் கழற்றாமல் வீட்டு வாசலில் நிற்க, ஆரத்தி எடுத்து அழைத்துச் செல்லாத குறையாய் மனோரமா அத்தனை ஆனந்தத்தோடு வரவேற்று, 'அப்பாடா, இனிமேல் நிம்மதி,' என்று ஆறுதல் பெருமூச்சுப் பரிய, தொடரும் கலகலப்பு சுகம்.

இந்த ஆதர்சத் தம்பதுகளின் அருமந்த புத்திரனாம் பிரபு, சிறந்த பள்ளியாசிரியராய் விளங்கத் தலைகீழ் முயற்சி பண்ணுகிறார். பாவம், மகா அலெக்சாந்தரின் வீரதீர சாகசங்களைப் பற்றிக் கலைஞர் தம் புலமையெல்லாம் கொட்டி எழுதித் தந்த வசனத்தை பாவ, ஆவேசத்துடன் பள்ளிச் சிறுவர்களிடம் ஒப்பித்துக் கொண்டிருக்க, அதைச் சகிக்காத ஒரு பையன், 'சார், பாம்பு!' என்று கத்த, பள்ளிக்கூடத்திலேயே உயரமான இடத்துக்குத் தாவி அவர் முழி பிதுங்கித் தம் காரெக்டருக்குக் கச்சித முத்திரை குத்தியிருக்கிறார்.

இவர் பணியாற்றும் பள்ளியில் நிரோஷா டீச்சராக வந்ததும் இந்தக் கோழை மானுடருக்கு ஒரு குபீர்க் காதல் தொற்றிக் கொள்ள, தோழன் கிட்டுவுடன் கொஞ்சம் தண்ணி, கொஞ்சம் பொய்க் கலப்புடன் ஆட்டம் போடுவதாகட்டும் — அவரை ஒரே அமுக்காய் அமுக்கி எஸ். ஐ. டிரெயினிங் கல்லூரியில் கொண்டு சேர்த்த பிறகு மேஜர் சுந்தர்ராஜனின் கெடுபிடியில் படும் அவஸ்தைகளாகட்டும் — பிரபுவின் அப்பாவிக் குழந்தை முகவாகுக்குப் பாந்தம். இந்த வெகுளித்தனம் வெகுண்டு திரும்பிய பிறகு வேகம்தான் — பழக்கப்பட்ட வேகம்.

ராஜேஷ் பாலிஷ் ஏற்றிக் கொண்டு திரும்பியிருக்கிறார். செமை வில்லன். ஊருக்கு நல்லவராய் அவர் கனிவேற்றிப் பேசும் போலிக்குழைவைக் காணும் போதே அதன் பின்னாலுள்ள பயங்கரத்தை உணரச் செய்திருக்கிறாரே!

நிரோஷாவை முதன் முதலாய்த் தரித்திரத்தில் இறக்கியிருக்கிறார்கள். இருந்தாலும் நடிப்பில் நிதி சேர்த்து விட்டார்.

தவிக்கும் பிரபு — மனசைக் கசக்கிப் பிழியும் காட்சிகளில் டைரக்டர், சந்தான பாரதியா, சத்தான பாரதியா? என்று கேட்க வைக்கிறார்.

'சாதனை புரிந்த காவல் அதிகாரிக்கு முதல்வர் கருணாநிதியே பதக்கம் குத்துவது யதார்த்தம் எனில், சில காவல் அதிகாரிகளின் தகாத போக்குகளையும் படம் இனம் காட்டுகிறதே?' என்ற கேள்வி பிறக்கலாம். அதனால்தானோ என்னவோ, 'அத்தகையவர் மீது குண்டர்கள் சட்டம் பாயும்' என்று சட்டமன்றத்திலேயே பேசி விட்டார் முதல்வர்!

— பி. எஸ். எஸ்.

# ஒரே ஒரு கணம்...

## வெ. சேஷாசலம்

ஒரு வழியும் புரியவில்லை. கண்ணைக் கட்டிக் காட்டில் விட்ட மாதிரி இருந்தது. ராமானுஜம், கட்டிலில் புரண்டு படுத்தான்.

கூடத்துச் சுவர்க் கடிகாரம், ஒற்றைக் காலால் நடக்கும் ஓசையை நிசப்தமான இரவில் இந்தப் படுக்கை அறையில் இருந்தே துல்லியமாய்க் கேட்க முடிந்தது: பன்னிரண்டு மணி அடித்ததை எண்ண முடிந்தது.

அவனுக்குத் தூக்கம் வரவில்லை.

இப்போதெல்லாம் தூக்கத்தைத் தொலைத்து விட்டு, இப்படி வெட்டு வெட்டென விழித்திருப்பது என்பது சகஜமாகவே ஆகி விட்டது. முன்பெல்லாம், படுத்ததும் அடித்துப் போட்டாற்போல் தூக்கம் வந்து விடும். படுத்ததும் தூங்கி விடுபவர்களைக் கண்டால் இப்போதெல்லாம், பொறாமைதான் வருகிறது.

பிரச்னைகள் அவனைத் தூங்க விடுவதில்லை. ஒரு மனுஷனுக்கு, எவ்வளவென்றுதான் பொருளாதாரப் பிரச்னை வருவது...?

போன செப்டம்பரில், பெரியக்கா புருஷன், முதுகில் ஒரு கட்டி என்று ஆஸ்பத்திரியில் சேர்ந்தவர்தான். ஆம்புலன்சில், நான்கு நாட்களுக்குப் பிறகு, பிணமாய்த்தான் கொண்டு வந்தார்கள். எல்லாச் செலவும் சேர்த்து ஐந்துக்கு வந்து விட்டது.

நவம்பர் மாதத்தில், சின்ன அக்கா மாமனார் மண்டையைப் போட்டு விட்டார். அக்கா, மாமா, பிள்ளைகள் துணிமணி செலவெல்லாம் சேர்த்து மூணரையைத் தாண்டி விட்டது.

டிசம்பரில், நடு அக்கா பெண், பூப்படைந்ததை முன்னிட்டுத் தாய்மாமன் என்கிற முறையில் நடந்த செலவு — மூணை எட்டி விட்டதே!

போதாததற்கு, இதோ இப்போது மைத்துனி விமலாவின் கல்யாணம் வேறு; 'வருகிறேன் வருகிறேன்' என்று, ஆறு மாதத்திற்கு முன்பே நிச்சயமானது இப்போது வந்தே விட்டது!

நண்பன் வேல்முருகன் எவ்வளவு நம்பிக்கையோடு சொல்லி இருந்தான்! 'ரெண்டாயிரம்தானே? தருகிறேன்' என்று! கடைசியில் இப்படிக் கையை விரித்து விட்டானே!

கல்யாணத்திற்கு, இன்னும் ஆறு நாட்கள் தானே உள்ளன...?

பக்கத்தில், ஆழ்ந்த உறக்கத்தில் இருந்த மனைவி சுசீலாவைப் பார்த்தான். குழந்தை முகம்., கனாக்கள் அலங்கரித்த தூக்கமோ...? அதனால்தான், உதடுகளில் இந்தப் புன்முறுவலோ..?

மைத்துனி விமலா கல்யாணத்திற்கு, முதலில் ஒரு பவுன்தான் வரிசை வைப்பதாக இருந்தது. அக்கா வீடுகளின் விசேஷங்களுக்கென்று வாங்கிய பிரத்தியேகக் கௌரவக் கடன்கள்; அவற்றுக்குரிய வட்டிகள்; அதற்கும் முன்பே, அடகு வைத்த நகைகள் எல்லாம் சேர்த்து ஆளையே 'ஸ்வாகா' செய்து விடும் போல் ஆகி விட்ட நிலைமையில் இரண்டாயிரம் மட்டும் வைக்கலாம் என்று மனைவியிடம் சொன்னான்.

'ஆமா. எங்க மனுஷாளுக்குச் செய்யறதுக்குத்தான், ஆயிரத்தெட்டுக் கணக்குப் பார்ப்பீங்க. இல்லை, கடனே கெடைக்கலைம்பீங்க. போன வருஷம் என் தங்கச்சிக்கு ஒரு வரன் பார்த்தப்போ, என்ன சொன்னீங்க? ஞாபகம் இருக்கா? ஒரு பவுன் வாங்கி வைக்கிறதாச் சொன்னீங்க இல்லே? இப்ப, ரெண்டாயிரம். இன்னம் அஞ்சாறு நாள்ல இது, ஆயிரமாவுதோ? ஐந்நூறாவுதோ...? ம். எல்லாம் என் தலை எழுத்து. எங்க வீட்டு மனுஷாள் முன்னாடி என்னைக்கித்தான் நான் தலைநிமிர்ந்து நடக்கப் போறனோ...?'

''சரி சரி, ஏன் சத்தம் போடறே?' என்று இவன் ஒருவழியாக அவளை அடக்கித்தான் விட்டான் என்றாலும், அவளின் நியாயமான ஆசைகளைக் கூட நிறைவேற்ற முடியாமல் இப்படி ஒரு வாழ்க்கை, நமக்கு விதிக்கப்பட்டிருக்கிறதே என்று நொந்து போனான்.

கொஞ்சம் கொஞ்சமாய்த் தூக்கம் ஆட்கொண்டது.

"ஏங்க, மணி ஏழாகுது; இன்னுமா தூங்கறீங்க? வாங்களேன். ஐயோ, எலிப்





## புரட்சிப் பெண்ணுக்குப் பொன்னோவியம்

* ஆண்களைத்தான் சூரியனுக்கு உதாரணம் காட்டுவார்கள்; இது மரபு. ஆனால் பாலகுமாரன் பெண்ணைச் சூரியனுக்குச் சமமாக்கியதோடு, ''இரண்டாவது சூரியன்'' என்று வாரிசுப் பட்டமும் சூட்டி விட்டாரே! மரபுகளைப் பெயர்த்துச் சாதனை புரிந்தவர் என்ற பெயரைக் காப்பாற்றிக் கொண்டு விட்டார்!

பாளையங்கோட்டை. செண்டர் ராமசாமி.

* பாலகுமாரன் சார் உங்கள் இரண்டாவது சூரியனையும், அதற்கேற்ப ஓவியம் வரைந்த மாருதி அவர்களையும் நான் மட்டும் பாராட்டவில்லை. எங்கள் குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரும் உங்கள் இருவரையும் பாராட்டுகிறார்கள்.

தக்கோலம். அ. முஸ்தபா

* அபிராமி பட்டர் 'உதிக்கின்ற செங்கதிர்' என்று பாடியது போலத் தன்னை எரித்துக் கொண்டு — பொசுங்கிக் கொண்டு உலகிற்கு ஒளிதரும் சூரியன் போன்றவள் பெண் என்பதையும் மாற்றத்தை மண்பதை தாங்கும் என்பதையும் அழகாக உணர்த்தியுள்ளார் பாலகுமாரன். பாராட்டுக்கள்.

வேலூர். காமாட்சி சத்தியநாராயணன்.

* சராசரி மனிதர்களை விடச் சிந்தனையில் மேம்பட்ட, பானுமதியும் பரத்தும் அவர்களின் சிந்தனையின் காரணமாகவே வாசகர்களின் மதிப்பைப் பெற்று விட்டார்கள். அவ்வப்போது தலைகாட்டிய நாகம்மாவுக்கும் வாசகர்கள் நெஞ்சில் இடமுண்டு!

கடலூர் — 2. ஆர். வேலுமணி.

* என்னதான் பானுமதி காரணம் சொன்னாலும், அவள் மேற்கொண்ட முடிவு ஏற்க முடியாத ஒன்று. திரிசங்கு சொர்க்க நிலைதான். அவள் பேசாமல் பரத்தைத் திருமணம் செய்து கொண்டிருக்க வேண்டும்.

மதுரை — 1. எஸ். சங்கர நாராயணன்.

* விவாகரத்துக்குப் பிறகு பானுமதி தன்னைப் போன்ற நிலையில் உள்ளவர்களுக்கு வழிகாட்டியாக அமையும் வண்ணம் — புரட்சிகரமான நெறிமுறைகளை பாலகுமாரனிடமிருந்து எதிர்பார்த்த வாசகர்களுக்கு ஏமாற்றம்.

வேலூர். ஆரணி. க. மனோகரன்.

* புரட்சிப் பெண்ணுக்குப் பொன்னோவியம் தீட்டி விட்டார் பாலகுமாரன்.

திருமயம். புலவர் முத்துவேங்கடேசன்.

பொறியில ஒரு எலி அம்புட்டுக்கிச்சிங்க. அதம் பண்ணுதுங்க. பார்க்கப் பாவமா இருக்குதுங்க. எந்திரிச்சி வாங்க...!'' என்று சுசீலா இவனை உலுக்கினாள்.

இவன் எழுந்தான். ஜன்னலுக்கப்பால், சூரிய ஒளி சிரித்தபடி சிந்திக் கிடந்தது.

எலிப்பொறியில், எலி, கம்பியைக் கம்பியைப் பிறாண்டிக் கொண்டிருந்தது. ஒரே சப்தம். மிரண்ட பார்வை; 'ஐயோ, என்னை விட்டு விடேன்' என்று கெஞ்சுகிற பார்வை. பொறியில், நேற்றிரவு சுட்டுச் செருகி வைத்த தேங்காய்ப் பத்தையில் இன்னுங் கொஞ்சம் மீதி இருந்தது.

இவன், ஸ்டோர் ரூமில் ஒரு சாக்கைத் தேடி எடுத்துக் கொண்டு வந்தான், கொட்டாவி விட்டுக் கொண்டே. கண்களில் இன்னும் கொஞ்சம் தூக்கம் ஒட்டிக் கொண்டிருந்தது.

''பார்த்து, சமர்த்தாக் கொல்லுங்க. பாவம் பார்க்கக் கூடாது. என்ன அதம் பண்ணுதுங்க. என்ன அட்டூழியம் பண்ணுதுங்க! நானும் ஒரு பூனைய வளர்க்கனும்னு பார்க்கறேன் எங்க முடியுது?!'' என்றவள், ''பார்த்துங்க பார்த்து'' என்றாள் மீண்டும்.

ராமானுஜத்துக்கு எரிச்சலாய் இருந்தது. 'எனக்குத் தெரியாதா?' என்பது போல் அவளைப் பார்த்தான்.

சாக்கின் வாய்ப்புறத்தில் எலிப் பொறியை வைத்து, மூடியைத் திறந்து, சாக்குக்குள் எலியைப் போக விட்டுப் பொறியை மனைவியிடம் கொடுத்து விட்டுச் சாக்கை வாய்ப்புறத்தில் இறுக மூடித் தரையில் நச்சென்று தலைக்கு மேல் தூக்கி அடித்தான்.

சாக்கில் கனமில்லை.

''அதோ, அதோ, அதோ தப்பிப் போயிடுச்சிங்க...! ச்சே. என்னங்க இப்படிப் பண்ணிட்டீங்க. ஒங்களுக்கு சாமர்த்தியமே போறாதுங்க...!'' என்று சர்டிபிகேட் வழங்கினாள்.

இவன், சாக்குப் பையை ஆராய்ந்தான். அட, ஒரு மூலையில் சின்னப் பொத்தல்! ஒரு கண நேரத் தேடுதலில் அந்த எலிக்கு, இது எப்படித் தெரிந்தது? ஆச்சரியம்தான்.

''ஒண்ணு சொல்றேன். கோச்சிக்க மாட்டீங்களே? இப்ப, இந்த எலிக்கு, சாக்குல இருந்த துவாரம் முன்னாடியேவா தெரியும்? இல்லியே! ஒரு கணத் தேடுதல். கண்டு பிடிச்சிடுச்சே...?! ஆனா, மனுஷாள் தாங்க ஒரு வழியும் புரியலையேன்னு புலம்பறோம்! சோர்ந்து ஒக்கார்ந்திடறோம்...! இந்த எலியோட சமயோசிதம் இருந்திடுச்சின்னா ஒலகத்தையே ஜெயிச்சிடலாம் இல்லையா?'' என்றாள் சுசீலா.

இவன் ஆச்சரியப்பட்டான். இவனுக்கு எதுவோ ஒன்று புரிவது மாதிரி இருந்தது.

விமலாவின் மொய், ஒரு பிரச்னையே அல்ல என்று இவனுக்குப் பட்டது. இன்னும் ஐந்து நாள் அவகாசம் இல்லையா? யோசிப்போம். ஒரு வழி புலப்படாமலா போய் விடும்?

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — VIII**
**ராஜ்மோகன் காந்தி**

**2**

அறுவைச் சிகிச்சைக்காக நியூயார்க்குக்கு அழைத்துச் செல்லப்பட்டார் அண்ணாதுரை. ஆபரேஷன் வெற்றிகரமாக நடந்து முடிந்ததாகச் செய்தி கிடைத்ததும் ஸி. ஆர். அவருக்கு எழுதினார்:

''டாக்டர் மில்லருடைய ஆற்றலும் கவனிப்பும், ஆண் — பெண் அடங்கலான பல்லாயிரக்கணக்கான மக்களின் பிரார்த்தனையும், உடல்நலம் பெறும் பாதையில் நீங்கள் செல்ல உதவியிருக்கின்றன. ஆனால் உங்களுடைய தினசரி வாழ்க்கை முறையை நீங்கள் சீரமைத்துக் கொள்ள வேண்டும். பகலை இரவாகவும், இரவைப் பகலாகவும் கருதி, நீங்கள் செயலாற்றக் கூடாது. புகையிலையின் எல்லாவித வடிவங்களையும் நீங்கள் விலக்கிவிட வேண்டும். மூக்குப் பொடி, புகையிலை மெல்லுதல், புகை பிடித்தல் போன்ற எதுவும் கூடாது. மூக்குப் பொடி பழக்கத்தை விட்டுவிட, ஏதாவது காரமான பொருளை மென்று பார்க்கலாம்.''



• இந்திராகாந்தி

# தொண்ணூறு வயதில் வாழ்க்கையின் ஆரம்பம்!

அண்ணாதுரையின் பதில்:

''உங்களுடைய அன்பான வார்த்தைகளை என்றும் நினைவில் வைத்திருப்பேன். மூக்குப்பொடி விஷயத்தில் உங்கள் அறிவுரையின்படி நடக்க முயற்சி எடுத்து வருகிறேன். சீக்கிரமே அந்த முயற்சியில் வெற்றி பெறுவேன் என்ற நம்பிக்கை இருக்கிறது. நமது நாட்டின் அரசியல் நிலைமை குறித்து அவ்வப்போது எனக்குக் கவலை ஏற்பட்டாலும் நீங்கள் அங்கே எனது சகாக்களுக்கு வழிகாட்டவும் மக்களைத் தலைமை தாங்கி நடத்திச் செல்லவும் இருக்கிறீர்கள் என்ற எண்ணமானது எனக்கு நம்பிக்கை அளிப்பதாக உள்ளது. நீங்கள் பொறுமையுடன் விதைத்துள்ள சிந்தனைகள், தரிசு நிலத்தில் விழுந்து விடவில்லை; பசுமையான விளைச்சலைக் காண்போம் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது.''



• ஹோர்வுட் பிரபு

இந்தியா திரும்பிய சில காலத்துக்குள் அண்ணாதுரை மீண்டும் உடல் நலமின்றிப் படுத்தார். புற்றுநோய்க்காக இன்னொரு ஆபரேஷன் நடந்தது. 1969 பிப்ரவரி மூன்றாம் தேதி அவர் காலமானார். தமிழகம் துயரத்தில் ஆழ்ந்து போனது. இதற்கு முன்பும் பின்பும் கண்டிராத அளவில் இறுதி அஞ்சலி செலுத்தத் தமிழக மக்கள் தலைநகரில் திரண்டார்கள்.

இரவு ஒரு மணிக்கு ராஜாஜியை எழுப்பி, செய்தி சொன்னார்கள். அகில இந்திய ரேடியோ அவரை அணுகிய போது, ''நான் எவ்வளவு சோகத்தில் ஆழ்ந்து போயிருக்கிறேன் என்பது எல்லோருக்கும் தெரியும்'' என்றார் ராஜாஜி. ''என்னுடைய சொந்தத் துயர் ஒருபுறமிருக்க, தமிழ்நாடு தனது வலது

கரத்தை இழந்துவிட்டது!''

**கா**ங்கிரஸை மத்திய ஆட்சியிலிருந்து அகற்றும் தமது மகத்தான திட்டத்தில் தி. மு. க. வையும் சேர்த்துக் கொள்கிற வாய்ப்பு அண்ணாதுரையுடன் முடிந்து போய் விட்டதாகக் கருதினார் ஸி. ஆர். அக்கட்சியில் உள்ள வேறு யாரும் அவர் அளவுக்கு உயர்ந்து அந்தத் திட்டத்தில் பங்கேற்க முடியும் என்று அவருக்குத் தோன்றவில்லை.

1967 ஏப்ரலில் தமது வாழ்நாளிலேயே முதல் தடவையாக ஸி. ஆர். அறுவைச் சிகிச்சைக்கு உள்ளானார்! ஹெர்னியா கோளாறு சரிப்படுத்தப்பட்டது. எண்பத்தெட்டு வயதிலும் ஆபரேஷனை நல்லபடியாகத் தாங்கினார். ஆயினும் அறுவைச் சிகிச்சையைத் தொடர்ந்து விக்கல் உபாதைக்கு அவர் உள்ளானார். இது, சுவாசிப்பதையும் உண்பதையும் உறங்குவதையும் சித்திரவதையாக்குவதாக அவர் சுயராஜ்யா – கல்கி வாசகர்களுக்கு எழுதித் தெரியப்படுத்தினார். பத்து நாட்களுக்குப் பிறகு இந்த உபாதை நீங்கியது.

எண்பத்தொன்பது வயதில் புதுதில்லி பத்திரிகையாளர்களை ராஜாஜி பிரமிக்க வைத்தார். அவர் பத்திரிகையாளரைச் சந்தித்தது பற்றிப் பின்வருமாறு இந்தியன் எக்ஸ்பிரஸ் (28.11.67) எழுதியது:

''நிலைக்களனை ராஜாஜி முழுமையாக ஆக்கிரமித்துக் கொண்டார். யதார்த்தமான சிந்தனைகளை உதிர்த்தார். தம்மிடம் வீசப்பட்ட சில கேள்விகளை ஆணவத்துடன் அலட்சியம் செய்தார். வேறு கேள்விகளுக்குச் சமயோசிதமாகப் பதில் கூறினார். சில சமயம் தம்மைத் தாமே கிண்டல் செய்து கொள்ளவும் செய்தார்: ''இந்தச் சந்திப்பைப் பற்றி எழுதும் போது என் பதில்களைத் தயவு செய்து இன்னும் அபிவிருத்தி செய்து சிறப்பாகப் பிரசுரியுங்கள்!''

மேற்கு வங்கத்தில் நிலவிய வன்முறையுடன் கம்யூனிஸ்டுகளை இணைத்துப் பேசிய அவர், இந்தப் பத்திரிகையாளர் சந்திப்பில் அக் கட்சிக்குத் தடை விதிக்க வேண்டும் என்ற கருத்தைத் தெரிவித்தார். உடனே ஒரு பத்திரிகை நிருபர், ''அடுத்த தேர்தலின் போது கம்யூனிஸ்டுகள் பெரும்பான்மை பலத்துடன் நாடாளுமன்றத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தால், குடியரசுத் தலைவர் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்? அக் கட்சியின் நாடாளுமன்றத் தலைவரைப் பிரதமராக்க வேண்டுமா, அல்லது ராணுவத்தை அழைக்க வேண்டுமா?'' என்று கேட்டார்.

வினாடி கூடத் தாமதியாமல் ராஜாஜி பதில் கூறினார்: ''இப்படி ஓர் இக்கட்டான நிலைமை குடியரசுத் தலைவருக்கு ஏற்படக் கூடாது என்பதற்காகத்தான் அந்தக் கட்சிக்குத் தடை விதிக்க வேண்டும் என்கிறேன்!''

ஓராண்டுக்குப் பிறகு பத்மாலயா தாஸ், ராஜாஜியை அவரது இல்லத்தில் பேட்டி கண்ட போது கேட்ட ஒரு கேள்வியும் ராஜாஜியின் பதிலும்:

''இந்தியாவை ஆள்கின்ற பொறுப்பு ஒரு நிர்ப்பந்தமாக உங்களுக்கு வந்து சேர்ந்தால் என்ன செய்வீர்கள்?''

''முதல் காரியமாக ஒரு டாக்டரிடம் போய் இளமை திரும்ப ஏதாவது வழியிருக்கிறதா என்று பார்ப்பேன்!''

ராஜாஜியின் குபீர்ச் சிரிப்பில் கேள்வி கேட்டவரும் தங்கு தடையின்றிக் கலந்து கொண்டார்!

ராஜாஜியைச் சந்தித்த பெரிய புள்ளிகளுள் ஹோர்வுட் பிரபுவும் ஒருவர். பிரிட்டிஷ் ராஜ குடும்பத்தைச் சேர்ந்த இவர், ராஜாஜி ஆங்கிலத்தைக் கையாண்ட அழகைக் கவனித்து அதைக் குறிப்பிட்டு எழுதியிருக்கிறார்.

**இ**ந்த வயதிலும் ஸி. ஆர். நிறையப் படித்தார். கல்கிக்கும் சுயராஜ்யாவுக்கும் விடாமல் எழுதினார். அவருடைய தொண்ணூறாவது பிறந்த நாளின் போது அவருடைய தீர்க்க தரிசனத்தைப் பாராட்டிப் பலர் எழுதினார்கள், பேசினார்கள். அவருடன் முன்பு கருத்து மாறுபாடு கொண்டிருந்தவர்கள் அதற்குப் பதில் அவர் கருத்தை ஏற்றுக் கொண்டிருந்தால் எவ்வளவு நன்றாய் இருந்திருக்கும் என்பது போல் பல சம்பவங்கள் பலரால் எடுத்துக்காட்டாகக் கையாளப்பட்டன.

இந்திரா காந்தியும் அவருக்கு எழுதினார்: ''நீங்கள் முன்னெப்போதையும் போல் சுறுசுறுப்பாகவும் சிந்தனையையும் செயலையும் உசுப்பி விடுகிறவராகவும் விளங்குவது நமது பொதுவாழ்வுக்கு நல்லது. நூறாண்டுகள் நீங்கள் எங்களோடு வாழ்வீர்களாக!''

இந்தச் செய்தியை ராஜாஜி வெளியிட்டார். அத்துடன் தமது குறிப்பையும் சேர்த்தார்! ''இந்திராவுக்கு நான் நன்றி கூறிக் கொள்கிறேன். ஆண்டவன் அருளால் அவருக்குத் தேவையான அனைத்தும் கிட்டட்டும். இந்திராவின் செய்தியானது அவர் தகப்பனாரைப் போலவே அவரும் பல சிறப்பியல்புகளைக் கொண்டிருப்பதை உணர்த்துகிறது.''

பாராட்டு, இந்திராவின் நலனுக்காகப் பிரார்த்தனை, கூடவே காங்கிரஸுக்கு எதிர்ப்பு! ''சுதந்திரக் கட்சியின் அடிப்படைக் கொள்கைகளை ஏற்று, அதன் உறுப்பினர்கள் உறுதியாக நிற்பார்களேயானால், 'தொண்ணூறு வயதில்தான் வாழ்க்கை ஆரம்பமாகிறது' என்ற கருத்தை ஏற்றுக் கொள்ள நான் தயாராயிருக்கிறேன்!'' என்று எழுதினார் ஸி. ஆர்!

(தொடரும்)



# உதவி

''சூப்பிட்டீர்களாமே...'' என்றவாறே உதவி மானேஜர் அறைக்குள் நுழைந்தான் காஷியர் கோபாலன்.

''வா... கோபால் நான் அவசரமா வெளியே போறேன்... முந்நூறு ரூபாய் பணம் வேணும்...''

''சரி சார்... பைனான்சியல் மானேஜர் கிட்டே சாங்ஷன் வாங்கி, இப்பவே கொண்டு வந்து தரேன் சார்...''

''நோ... இது எனக்குப் பர்சனலா வேணும்... அதனால உன் அளவுல அட்ஜெஸ்ட் பண்ணிக் கொடு... இரண்டு நாள்ல திருப்பிக் கொடுத்திடறேன்...''

''சார்... எப்.எம்., சாங்ஷன் இல்லாம எப்படி சார் பணம் கொடுக்கறது?''

''உன்னால அட்ஜெஸ்ட் செய்ய முடியாதா...?''

''சாரி சார்...''

''நெவர் மைண்ட்... நான் வேறு எப்படியாவது சமாளிச்சுக்கறேன்...''

மிகவும் வருத்தத்துடன் காஷியர் கோபாலன் தன் இருக்கையில் போய் அமர்ந்து கொண்டான். லட்ச லட்சமாகப் பணம் புரளும் பெரிய எக்ஸ்போர்ட் நிறுவனத்தின் காஷியரான தன்னால், தனக்கு மிகவும் வேண்டியவரும், தன்னை இந்தக் கம்பெனியில் வேலைக்குச் சேர்த்து விட்டவருமான உதவி மானேஜருக்குப் பணம் தந்து உதவ முடியவில்லையே... என்று வருத்தப்பட்ட கோபாலன், என்ன செய்யலாம் என்று யோசித்தான்.

யாரிடமும் பணம் கேட்டுப் பழக்கமில்லை கோபாலனுக்கு. ஆனாலும் உதவி மானேஜருக்கு எப்படியும் உதவ வேண்டும். என்ன செய்யலாம், யாரிடம் பணம் கேட்கலாம்...? என்று யோசித்த போது, சட்டென்று அகௌண்டண்ட் சிவராமன் நினைவுக்கு வர, அவரிடம் சென்றான். தனது அவசரத் தேவைக்கு, முந்நூறு ரூபாய் தேவை என்று கேட்டு, ஒரு வழியாகப் பணத்தை வாங்கிக் கொண்டு, நேராக உதவி மானேஜர் அறைக்குச் சென்று, பணத்தை அவரிடம் கொடுத்தான்.

''என்ன கோபால்.... எப்படி அட்ஜெஸ்ட் செய்தாய்...?''

''எனக்கு வேண்டுமென்று சிவராமனிடமிருந்து கடன் வாங்கினேன் சார்.''

''ஏம்பா இப்படிச் செய்யணும்? சீப் காஷியர் நீ... ஒரு முந்நூறு அட்ஜெஸ்ட் செய்ய முடியாது உன்னாலே... சரி சரி... பணம் கொடுத்ததற்கு ரொம்ப தாங்க்ஸ்...''

ஒரு வாரம் ஆகியும் உதவி மானேஜர் பணம் தருவதாகக் காணோம். அவர் தரவில்லையே என்பதற்காக, ஆபத்துக்கு உதவிய சிவராமனை நாமும் காக்க வைப்பது நியாயமல்ல என்று நினைத்த கோபாலன், கை மோதிரத்தை அடகு வைத்து, முந்நூறு ரூபாயைச் சிவராமனிடம் கொடுத்தான்.

''இதோ பாரு கோபால்,... நீ உனக்கென்று சொல்லி அன்று பணம் வாங்கினே. ஆனா பணத்தை நீ யாருக்குக் கொடுத்தேன்னு எனக்குத் தெரியும்.''

''சிவராமன் சார்...''

''சரி சரி விஷயத்துக்கு வருவோம்... அந்த உதவி மானேஜர் பணத்தைத் திருப்பிக் கொடுத்துட்டாரா?''

''இல்லே.''

''பின்னே நீ எதுக்காக உன் பணத்தை எடுத்துக் கொடுக்கறே...''

''நல்லாயிருக்கே... உதவி மானேஜர் பணம் தரலேங்கறதுக்காக ஆபத்துல உதவின உங்களை நான் காக்க வைக்கலாமா...?''

''இப்படி எதுக்கு வம்பை விலை கொடுத்து வாங்கறே? அவர் கம்பெனி பணத்தை அட்ஜெஸ்ட் செய்து கொடுக்கத்தான் சொன்னார். முடிந்தாக் கொடு.

ஓப்பிலி அப்பன்

இல்லேன்னா முடியாதுன்னு சொல்லிட்டு போ... இப்படி சொந்தப் பணத்தை ஏன் கொடுக்கறே?''

''சிவராமன் சார்... உதவி மானேஜர் என்னை இந்தக் கம்பெனியிலே வேலைக்குச் சேர்த்தவர். காஷியர் என்ற முறையில் அவருக்கு நான் உதவ முடியவில்லை. ஆனால் கோபாலன் என்ற முறையில் அவருக்கு உதவக் கடமைப்பட்டுள்ளேன்."

''நீதான் கோபாலன். நீதான் காஷியர். காஷியர் என்ற முறையில்தான் அவர் உன்னிடம் பணம் கேட்டார்.''

''அவர் கேட்டது கம்பெனிப் பணம். அதனால்தான் என்னால் எதுவும் செய்ய முடியவில்லை. அவருக்கு என் அளவிலேயே கம்பெனி பணத்தைக் கொடுக்கலாம். ஆனால் நாளைக்கு எனக்கே பணமுடை ஏற்படுகிறது என்று வைத்துக் கொள்வோம்... ஒருமுறை உதவி மானேஜருக்கு அட்ஜெஸ்ட் செய்து கொடுத்த தைரியத்தில், என் சொந்தத் தேவைக்கும் பணம் எடுத்துக் கொள்ளும் அசட்டுத் துணிச்சல் வந்துவிடும். இந்தச் சபலம் லட்ச லட்சமாகப் பணம் புழங்கும் இடத்தில் வேலை பார்க்கும் ஒரு காஷியருக்கு ஏற்படலாமா? நீங்களே சொல்லுங்க சார்... கோபாலன் தனிப்பட்ட முறையில் பணத்தைக் கொடுத்து ஏமாறலாம்... ஆனால் கம்பெனி காஷியர் கோபாலன் கணக்கில் ஒரு பைசாக் குறையவும் கூடாது. கூடவும் கூடாது...''

''சபாஷ் கோபால். கீப் இட் அப்! உன் பேச்சைக் கேட்டுக்கிட்டே வந்தேன். பொறுப்பு வாய்ந்த பதவிக்கு ஒரு சரியான நபரைத்தான் நான் இந்தக் கம்பெனிக்குச் சிபாரிசு செய்திருக்கேன். இந்தா உன்னோட பணம் முந்நூறு ரூபாய்...''

உதவி மானேஜர் பணத்தைத் திருப்பிக் கொடுத்ததில் ஏற்பட்ட மகிழ்ச்சியை விட, அவரது பாராட்டு காஷியர் கோபாலனுக்கு மனநிறைவைக் கொடுத்தது!

---



## ஒரு வித்தியாசமான மன்றம்!

ஊருக்கு ஊர் நற்பணி மன்றங்கள் இருக்கின்றன. சீர்காழியிலும் 'ஓம் நமசிவாய மன்றம்' என்று ஒரு மன்றம் இருக்கிறது. இது ஒரு விஷயமா என்றால், ஆமாம்! இந்த மன்றம் நூற்றியெட்டு சிவாலயங்களைத் தேர்ந்தெடுத்து அவற்றில் உழவாரப் பணியும், புனருத்தாரணப் பணியும் செய்து வருவது சாதாரண விஷயமா என்ன! மற்ற ஊர் மன்றங்களும் பின்பற்ற வேண்டிய விஷயமல்லவா!

## ஒரு வித்தியாசமான தியாகி

சமீபத்தில் நான் வேலூருக்குச் சென்றிருந்த போது ஒரு வித்தியாசமான தியாகியைச் சந்தித்தேன். ஆண்டுக்குச் சுமார் ஐம்பதாயிரம் ரூபாயைத் தன்னந்தனியொருவராகச் செலவழித்துத் தினசரி சுமார் ஐம்பது பேருக்குச் சிறந்த டாக்டரைக் கொண்டு வைத்திய உதவி கிடைக்கச் செய்து வருகிறார் ஜெயராமன் என்பவர். இவர் வேலூரில் பிரபலமாக உள்ள ரங்க பிரசாத் ஜுவல் பேலஸின் உரிமையாளர். ஒன்றரை ஆண்டுக்கு முன்பு ''பணம் பணம் என்று ஐம்பதாண்டுகளாகச் சம்பாதித்தது போதும். இனி நீயே கடையைக் கவனித்துக் கொள்'' என்று பொறுப்புக்களை ஒப்படைத்து விட்டுப் பொதுப்பணிக்கு வந்து விட்டார் ஜெயராமன். சுமார் ஐந்நூறு புத்தகங்கள் கொண்ட சாய்பாபா லைப்ரரியையும் ஏற்படுத்தியுள்ளார் இவர்.



— ப. சிதம்பரம், திருச்சி – 1.



## ஒரு வித்தியாசமான மனிதர்!

தெ. ஆற்காடு மாவட்டத்திலுள்ளது மா. புளியங்குடி. அங்கு பரசுராமன் என்ற ஓய்வு பெற்ற ஆசிரியர். அவர் பணியாற்றிய போது சீன ஆக்ரமிப்பு வந்தது. அப்போதைய பிரதமர் நேரு, தேசிய பாதுகாப்பு நிதிக்கு ஒரு நாளைய ஊதியத்தைத் தருமாறு மக்களுக்கு வேண்டுகோள் விடுத்தார். அதன்படி பரசுராமனும் அன்றைய தமது ஒரு நாள் ஊதியமான மூன்று ரூபாயைத் தந்தார். அன்றிலிருந்து இன்று வரை — கடந்த இருபத்தாறு ஆண்டுகளாக மாதா மாதம் மூன்று ரூபாயைப் பிரதமரின் தேசிய நிவாரண நிதிக்கு அனுப்பிக் கொண்டு வருகிறார்!

# ‘உன் பாதங்களின் அசுத்தத்தை நீக்கு’



அறிமுகப் படுத்துகிறோம்

**Tramcoir**

ரப்பர் துணையுடன் முன்புறவாசல் மிதியடிகள்

டிராம் காயர் கண்டுபிடிப்பு ரப்பர் வேட்டகள் துணையுடன்
முன்புறவாசல் மிதியடிகள் நேர்த்தியாக
அடைப்பதற்கேற்ற குணம். 70 ஆண்டு காலமாக உலகம்
முழுவதும் விரும்பி தேர்ந்தெடுக்கப்பட்டது.

முதல் முறையாக இந்தியாவில்

**Tramcoir**

முன்புறவாசல் மிதியடிகள்

அசுத்தம் இங்கே நீக்கப்படுகிறது.

மிதியடிகள், பாய்கள், கம்பளிகள்
கிடைக்கும்.

விற்பனையாளர்கள்: **Kurl-on**®

ஏரியா சேல்ஸ் ஆபீஸ்: 158, பைகிராப்ட்ஸ் சாலை,
ராயப்பேட்டை, சென்னை-600 014, தொலைபேசி: 821710;
46 வெங்கடசாமி நாயுடு தெரு, ராம்நகர்,
கோயம்பத்தூர்-641 009. தொலைபேசி: 26921

தயாரிப்பாளர்கள்:

டிராவன்கூர் மேட்ஸ் & மேட்டிங் கம்பெனி, ஷேர்த்தலை

---

துவைக்க வேண்டுமே என்ற கவலை எனக்கில்லை!

# ஏஞ்சல்
## வாஷிங் மெஷின்

தமிழக அரசின் குவாலிடி கண்ட்ரோல் சென்டரின் அங்கீகாரம் பெற்றது

மாடல்கள் :
- முழு எவர்சில்வர்
- ரிவர்சிபிள்
- பிளாஸ்டிக் கிளாஸ்
- வாஷர்கம் டிரையர்
- எலக்ட்ரானிக் ரிவர்சிபிள்

ஏஞ்சல் டொமஸ்டிக் எக்யுப்மெண்ட்ஸ்
கோயமுத்தூர் - 641 025



விலை ரூ. 2750/-

விலை ரூ. 3850/-

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: * ஏஞ்சல் ஹவுஸ், 124, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, சென்னை — 10, போன: 666556. * P. P. மாடர்ன் எலக்ட்ரோ மெஷின்ஸ், கோவை — 18, போன்: 35608, 35147. * திரு முத்து செல்வி கார்ப்பரேஷன், மதுரை — 1, போன்: 224 88, 37087. * செந்தூர் கார்ப்பரேஷன், திருச்சி — 2, போன்: 29261.

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: தென் ஆற்காடு & பாண்டிச்சேரி மார்ஸ் எண்டர்பிரைசஸ், சென்னை — 5, போன்: 84 3018 & 84 0226.

டீலர்கள்: * ஸ்டேண்டர்டு எலக்ட்ரானிக்ஸ், ஈரோடு — 1, போன்: 73177. * லக்ஷ்மி மியூசிகல்ஸ், தி. நகர், போன்: 444629. * ஸ்ரீ கோகுலம் & கோ, கோடம்பாக்கம், போன்: 4 26868 & 4 26296. * T. V. எலக்ட்ரானிக்ஸ், பெரம்பூர், போன்: 619315. * சத்யா ஏஜென்சீஸ், தூத்துக்குடி — , போன்: 24985. * S. S. அண்ணாமலை எண்டர்பிரைசஸ், திருவான்மியூர், போன்: 4 15272. * M. A. P. P. தொழிலாளர் நுகர்வோர் கூட்டுறவு பண்டகசாலை லிட்., P.D. P. M. காலனி, கல்பாக்கம். * பிரியன் எண்டர்பிரைசஸ், பாண்டிச்சேரி, போன்: 37598. * அங்கங்க் ஏஜென்சீஸ், கரூர் — 1, போன்: 23912. * குவாலிட்டி பர்னிச்சர், தஞ்சாவூர் — 9, போன்: 2224. * மெக்னிக் ஏஜென்சீஸ், சிதம்பரம் — 1. * கோல்டன் டிரேடர், மதுரை — 1, போன்: 364 15, 23018. * ராஜ் & ராஜ் எண்டர்பிரைசஸ், திண்டுக்கல், போன்: 6840. * கோசாகா ஏஜென்சீஸ், மெயின் பசார், நெய்வேலி — 3, போன்: 333. * ஆனந்தகுமார் T. V. சென்டர், கடலூர் — 1, போன்: 1061. * இந்தியா எலக்ட்ரானிக்ஸ், விழுப்புரம் — 2, போன்: 2364.



# "சினிமாவே தேவையில்லை" என்கிறாரே பி.ஹெச்.பாண்டியன்?

* சினிமா தேவையில்லை!

* சோ. அனந்தராமன், மதுரை.

? 'பிராமணர் சங்க மாநாட்டில் சிலர் காரமாகப் பேசியதன் எதிரொலிதான் தி.க. வினரின் எதிரலை' என்று தராசு பதிலளித்துள்ளார். பிராமணர் சங்கம் அமைவதற்கு முன்பே தி. க. வினர் அவ்வப்போது பூணூல் அறுப்பது, ஆபாச போஸ்டர் ஒட்டுவது போன்ற கைங்கரியங்களில் ஈடுபட்டிருந்ததை ஏன் மறைக்க வேண்டும்?

! பதிலின் இரண்டாவது பகுதியைக் கவனமாகப் படித்திருந்தால் இந்தக் கேள்வியே எழாது. 'முட்டை முதலில் தோன்றியதா? கோழியா?' என்ற சர்ச்சையை நீக்கி, பரஸ்பரம் அன்பு செலுத்தி, நேசப்பான்மையுடன் வாழ்வதுதான் எல்லோருக்கும் நல்லது. 'வாழு, வாழவிடு' என்றது இதைத்தான்.

* ஆர். அப்துல் சலாம், திருச்சி.

? 'சினிமாவே தேவையில்லை, சினிமாவிற்கு மானியம் தருவது அவசியமில்லை' என்று. பி. ஹெச். பாண்டியன் பேசியது பற்றி?

! சினிமா இல்லையெனில் எம். ஜி. ஆர். முதல்வராகியிருக்க மாட்டார்; இவரைச் சபாநாயகராக்கியிருக்க மாட்டார்; இவருக்கு வானளாவிய அதிகாரம் (தாற்காலிகமாகக் கூட) கிடைத்திருக்காது!

* பி. செல்வகுமார், ஆழியார்.

? 'ஒவ்வொரு பக்கத்தையும் படித்துப் பார்த்துப் புத்தகங்களைத் தேர்வு செய்து கொண்டிருக்க முடியாது' என்று கல்வி அமைச்சர் கூறியுள்ளாரே?

! பேராசிரியர், கல்வி அமைச்சர் இப்படிப் பொறுப்பின்றிப் பேசினால் என்ன செய்வது? 'ராமனே, குற்றம் செய்தால் யாரிடம் முறையிடுவது?' என்ற கதைதான்!

* ஜி. குசேலன், சங்கராபுரம்.

? 'நிர்வாகவசதிக்காகச் சிறிய மாநிலங்கள் அமைவதைத்தேசிய முன்னணி அரசு ஆதரிக்கும்' என்று வி. பி. சிங் கூறியுள்ளாரே?

! ஏன், அவருக்கு இருக்கிற தலைவலிகள் போதவில்லையோ!

* வி. எஸ். வாசன், சென்னை — 33.

? 'ஜல்லிக்கட்டைத் தடை செய்ய வேண்டாம்' என்ற தராசு பதிலை ஜீரணிக்க முடியவில்லை. இதில் காளைகள் சித்திரவதைக்குள்ளாவது தெரியுமா? பலர் காயமடைவதும் சிலர் உயிர் போவதும் வாடிக்கையாகி விட்டதே?

! சட்டபூர்வமான விதிமுறைகள், பாதுகாப்பு ஏற்பாடுகள் என்று நான் குறிப்பிட்டிருப்பதை நீங்கள் கவனிக்கவில்லையா? அது மனிதருக்கு மட்டும் அல்ல; காளைக்கும்தான். ஜல்லிக்கட்டு கூடாது எனில் பாக்ஸிங், ஃபென்ஸிங் போன்ற பல விளையாட்டுக்களும் தடைசெய்யப்பட வேண்டியவையே. எல்லை மீறும் போது எந்த விளையாட்டும் அநாகரிகம்தான். ஜல்லிக்கட்டைக் கட்டுப்பாட்டோடு நடத்தச் சட்டம் கொண்டு வருவதே சரி.

* என். வி. உச்சிமாகாளி, தச்சநல்லூர்.

? புதிய காப்டனுடன் புதிய அணியை இந்திய கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டு நியூசிலாந்துக்கு அனுப்பியது எந்த விதத்தில் சரி?

! சரியில்லை என்பதைக் கிரிக்கெட் கண்ட்ரோல் போர்டே ஒப்புக்கொண்டு விட்



* பிரதமருக்குச் சவால்

* பெருந்தன்மை



**நீங்கள் கேட்டவை — தராசு**

* படிக்துப் பாராமல்...



டதே! இல்லாவிட்டால் வெங்சர்க்காரை ஏன் அலறி அடித்துக் கொண்டு திரும்ப அழைத்திருக்க வேண்டும்? குழுவில் உள்ள 'ரிஸர்வ்' ஆசாமிகளைக் காயம்பட்ட சித்துவுக்குப் பதில் பயன்படுத்திக் கொள்வதுதானே? பழிவாங்கும் உணர்வு, பலவீனமான டீமைத் தேர்ந்தெடுத்து அனுப்பியது என்பதையே முதல் டெஸ்டின் முடிவும் உணர்த்துகிறது.

* எஸ். எஸ். மணி, திருவனந்தபுரம்.

? உங்களுடைய ராஜீவ் விரோதப் போக்கு, "ராஜீவ் தலைக்குமேல் பறந்த செருப்பு" என்று முதல் பக்கத்தில் தலைப்புப் போட வைத்து விட்டதே? இதுதான் பத்திரிகை தர்மமா?

! தமிழ்நாட்டின் பண்பாட்டுக்கு ஒவ்வாத காரியம் நடந்திருப்பதை அடிக்கோடிட்டுக் காட்டுவதே நோக்கம். தமிழக மக்கள் அவமானப்பட வேண்டிய சம்பவம் என்பதை உணர்த்தவே அதற்கு முக்கியத்துவம் தரப்பட்டது. இதையெல்லாம் மூடி மறைப்பது அல்ல பத்திரிகை தர்மம். தலைவர்களோ, தொண்டர்களோ செய்யும் தவறுகளை வெளிச்சம் போட்டுக் காட்டுவதுதான் பத்திரிகைப் பணி. ராஜீவின் சில செயல்கள் நமக்கு வருத்தமளித்தாலும் நமக்கு ராஜீவிடம் விரோதமில்லை. எதிர்ப்பு வேறு; விரோதம் வேறு.

* என். ஷண்முகம், திருவண்ணாமலை.*

? பிரதமருக்கு அமிதாப்பச்சன் சவால் விட்டிருப்பது குறித்து?

! 'இந்தப் பூனைக்குப் பாலைக் குடிக்கத் தெரியாது' என்பது மெய்யானால் அமிதாப்புக்குக் கறுப்புப்பணம் என்றால் என்ன என்பதே தெரியாது! ஸ்விட்ஸர்லாந்தில் காணப்படும் வெண்பனி போல் அமிதாப் பச்சன் மனமும் வெள்ளை!

* கிஷோர், திருச்சி.

? வி. பி. சிங்கின் சென்னை விஜயம் பற்றி?

! கடற்கரைப் பேச்சு, ஜனதா தள ஊழியர் ரகளை முதலியன இருக்கட்டும். அவர் தொப்பியில்லாமல் வந்தது முதலில் ஆச்சரியத்தையும் பிறகு – காரணம் அறிந்த பின் – மனநிறைவையும் அளித்தது. அவர் இதுவரை அணிந்துவந்த தொப்பி, ஆட்டுக்குட்டி உரோமத்தினால் செய்யப்படுவது என்றும், அத்தகைய தோலைப் பெற ஆட்டுக்குட்டிகள் சித்திரவதை செய்யப்படுகின்றன என்பதையும் அறிந்த பிரதமர், இதுவரை தாம் அறியாமல் செய்த பிழைக்குப் பெருந்தன்மையுடன் வருத்தம் தெரிவித்து, இனி செயற்கை உரோமத்தால் ஆன தொப்பியையே அணியப் போவதாக அறிவித்துள்ளார்.

* அனுபமா, சென்னை.

? ருஷ்யாவும் ஜனநாயக நாடாகிவிடும் போலிருக்கிறதே?

! நாம் அனுபவிப்பது போன்ற ஜனநாயகமாக அது இருக்குமா? நமக்குள்ளது போன்ற அடிப்படை உரிமைகள் எல்லாம் அங்கும் மக்களுக்கு வழங்கப்படுமா? என்பது சந்தேகமாகத்தான் உள்ளது. கம்யூனிஸத்துக்கு டாட்டா சொல்லிவிடாமலே ஏக கட்சி ஆட்சிக்கு முடிவு கட்டி, எதிர்க்கட்சிக்கும் இடமளிக்கும் ஏற்பாடாக இருக்கலாம். இதுவே பெரிய, புரட்சிகரமான மாறுதல்தான். ஜனநாயகத்துக்குப் பிள்ளையார் சுழி போடப்பட்டிருப்பதாகக் கொள்ளலாம். அங்கு அமையப் போகிற ஆட்சி முறை எத்தகையதானாலும் அந்நாடு இன்று போல் என்றும் சக்தி மிக்கதாக, இடுக்கண்களையும் நண்பனாக விளங்கட்டும். வாழ்த்துவோம்.

* அவசர அழைப்பு * விரோதமற்ற எதிர்ப்பு



* ரூ. 20 பரிசு பெறுபவர்:

என். ஷண்முகம்,
கூட்டுறவு வங்கிச் செயலர்,
32—k, பைபாஸ் சாலை,
திருவண்ணாமலை — 606 602.

# கல்யாணத்திலே நடந்தது...



## மாமா செய்த தமாஷ்!

OO எங்கள் கடைசி மாமா மிகவும் தமாஷ் பேர்வழி. சதா கிண்டலும் கேலியுமாகத் தான் பேசுவார். எனது கல்யாணத்தின் போது மாமாவுக்கும், மாமிக்கும் புதிய வேஷ்டி, புடைவைகளைக் கொடுத்து, ''உடனே இரண்டு பேரும் கட்டிக்குங்கோ'' என்று சொன்னபோது, மாமா கொடுக்கப்பட்ட வேஷ்டியைக் கீழே வைத்துவிட்டு, மாமியைப் போய்க் கட்டிக் கொண்டார்! சிரிப்பலைகளுக்குக் கேட்பானேன்!

— மைதிலி குமாரஸ்வாமி, சென்னை — 4

## காரில் வந்த காரிகை!

OO ஜானவாசத்தில் மாப்பிள்ளை காரில் ஊர்வலமாக வரும் போது, பெண்ணையும் எதிரே ஒரு காரில் ஏற்றிக் கொண்டு வந்து காண்பிப்பது பழக்கம். எனக்கும் எனது ஜானவாசத்தில் அப்படிப் பெண்ணைப் பார்க்க ஆசை. எனது ஆசையைப் புரிந்து கொண்டது போல் எனது (இப்போதைய) ஷட்டகர், அதற்கான ஏற்பாடுகளைச் செய்யச் சொல்லிக் கொண்டிருந்ததைக் கண்டு எனக்குள் ஒரே மகிழ்ச்சி. எக்கச்சக்க உற்சாகத்தோடு எதிர்ப்பக்கத்தில் நான் மணமகளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அந்தக் காரும் வந்தது. காருக்குள் அலங்காரத்தோடு உட்கார்ந்திருந்த காரிகையின் முகத்தை யாரோ என் பக்கம் திருப்பி, 'இப்படி நல்லாத் திரும்பி மாப்பிள்ளையைப் பாரேண்டி' என்றார்கள். மணப் பெண்ணைப் பார்த்த நான் அதிர்ந்தேன். ஆம், குடமிளகாய் மூக்கும் ஆந்தைக் கண்களும் கரேலென்ற முகத்தைக் கண்டால் எப்படியிருக்கும்? நிச்சயம் நான் பார்த்த பெண் இவளில்லை; ஏதோ சூது நடந்திருக்கிறது என்று நான் நினைத்தபோது, ஏகப்பட்ட சிரிப்பலைகளோடு அந்தக் கார் நகர்ந்து விட்டது. உற்சாகமிழந்து — மன உளைச்சலோடு நான் கல்யாண வீட்டை அடைந்தபோது, அங்கே என் 'ராஜி' அலங்காரத்தோடு வாசலில் காத்திருந்தாள். அப்போதுதான் எனக்குப் போன உயிர் திரும்பி வந்தது. பிறகுதான் புரிந்தது, பெண் வேடம் போட்டு என்னைத் திணறடித்தவர் எனது ஷட்டகர்தான் என்பது!

— வி. பாலாஜி, ஈரோடு — 1

## உடுக்கை இழந்தவன் கைபோல...

OO என் தங்கையின் கல்யாண விருந்து. முதல் பந்தி நடந்து கொண்டிருந்தது. அப்போது இலைகளை எடுத்துச் சுத்தம் செய்யும் பையன்களில் ஒருவன், தெருவில் ஏதோ கலாட்டா செய்தானென்று போலீஸில் பிடித்துக் கொண்டு போக, மற்ற பையன்களும் கோபமடைந்து அவன் கூடவே வெளியேறி விட்டார்கள். முதல் பந்தி முடிந்ததும், சுத்தம் செய்யாமல் அடுத்த பந்தியை எப்படி ஆரம்பிக்க முடியும்? தவித்துக் கொண்டிருந்த போது நிலைமையை உணர்ந்து கொண்ட எனது நண்பர்கள் கௌரவம் பார்க்காமல் ஓடிவந்து சுத்தம் செய்தார்கள். அதை இன்று நினைத்தாலும் புல்லரிக்கிறது!

— இராம. நிலாசேகர், வேலூர் — 6

## டிப்டாப் இளைஞன்!

OO சுமார் பத்தாண்டுகளுக்கு முன்பு எனது உறவினர் திருமணம் நடந்தது. பெண் வீட்டுக்காரர் ஒருவர், வெள்ளிச் சந்தனக் கும்பாவில் சந்தனம் கொடுத்துக் கொண்டிருந்தார். அவரை விருந்து பரிமாற அழைக்கவே, அவரருகில் டிப்டாப்பாக இருந்த இளைஞர் ஒருவர் அந்த வெள்ளிச் சந்தனக் கும்பாவை வாங்கிக் கொண்டு, 'நான் கவனித்துக் கொள்கிறேன், நீங்கள் போங்கள்' என்று சொல்லி அவரை அனுப்பினார். மாப்பிள்ளைக்கு மிகவும் வேண்டியவன் போல் இருக்கிறது என்று நானும்



நினைத்தேன். சாப்பிட்டு விட்டுத் திரும்பிய போது அந்த இளைஞரைக் காணவில்லை! அன்றைக்கே சுமார் ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள வெள்ளிச் சந்தனக் கும்பா போனது போனதுதான்!

— கே. சுப்பிரமணியன், திண்டுக்கல் — 2

## பந்தியில் சிலேடை!

OO என் சித்தப்பாவின் திருமணம். சித்தப்பாவின் நண்பர்கள் அடித்த கும்மாளம், வேடிக்கை மயம்தான்! பந்தியில் போடப் பட்ட இலை காற்றில் இலேசாகப் பறந்த போது, 'பறக்காதே, பறக்காதே, போடு வாங்க பறக்காதே!' என்றார் ஒருவர். அந்தச் சிலேடையில் எங்கள் பசியையும் மறந்து சிரித்தோம்.

— வி. உமா, சென்னை — 92

## கல்கண்டா, மணமகளா?

OO நெருக்கமான நண்பர் வீட்டுத் திருமணம். அவர்கள் வழக்கப்படி ஒரு சடங்கில், மணமக்களை எதிரெதிரே அமரவைத்துக் கொண்டு, மணமகனிடம், ''கல்கண்டு இனிப்பானதா அல்லது மணமகள் இனிப்பானவளா?'' என்று கேட்டார்கள். அதற்கு மணமகன் கூற வேண்டிய பதில், ''மணமகள்தான் இனிப்பானவள்'' என்பது. ஆனால், குறும்புக்கார மணமகனோ, ''இரண்டையும் கொடுங்கள், சுவைத்துப் பார்த்த பிறகு சொல்கிறேன்'' என்றாரே பார்க்கலாம்!

— சத்தி ஏ. ஜே. ஜப்பார், சத்தியமங்கலம்.

## போலீஸில் மாட்டிய மாப்பிள்ளை!

OO எங்கள் உறவுப் பெண்ணின் திருமணத்திற்கு முதல் நாள், தனது தம்பியும், மணமகனுமான இளைஞனைப் பெண்ணின் தாய் அழைத்து, அவசரமாய்க் கடைவீதிக்குச் சென்று பூவாங்கி வரச் சொன்னார்கள். மாப்பிள்ளையும், பெண்ணின் தம்பியும் சைக்கிளில் 'டபுள்ஸ்' கிளம்பினார்கள். அப்போது 'டபுள்ஸ்' செல்லக்கூடாது என்பதால், போலீஸ்காரர் ஒருவர் அவர்களை வழியிலேயே மடக்கிப் பிடித்துக் கொண்டார். மாப்பிள்ளை என்ன சொல்லியும் விடவில்லை. 'என்னடா டபாய்க்கிறாய்?' என்று ஒரு தட்டுத் தட்டி ஸ்டேஷனுக்கு இழுத்துச் சென்றுவிட்டார். பூ வாங்கப் போன மாப்பிள்ளை திரும்பாததால் கல்யாண வீடே திமிலோகப் பட்டது. கடைசியில் யாரோ வந்து விஷயத்தைச் சொல்ல, கல்யாணத்திற்கு வந்திருந்தவர்கள் கூட்டமாய்ச் சென்று மாப்பிள்ளையை மீட்டு வந்தனர்!

— திருமதி கே. சுந்தரா, சென்னை — 44

## தலைக்கு வந்த ஆபத்து!

OO தமது தோழியின் மகள் திருமணத்திற்காக என் அம்மா சென்றிருந்தாள். மாப்பிள்ளை ஊர்வலம் நடந்து கொண்டிருந்தது. எங்கள் உறவினர் ஒருவர் டாக்டர். அவர் என் தாயைப் பார்த்துப் பேசுவதற்காக அங்கு வந்திருக்கிறார். மாப்பிள்ளையைப் பார்த்ததும் டாக்டர் என் தாயாரிடம், ''உங்கள் தோழியின் மகள் திருமணம் என்பதால் சொல்கிறேன். இந்த மாப்பிள்ளைக்கு டி.பி. தீவிர நிலையில் இருக்கலாமென்று தோன்றுகிறது. ஆயுட்காலம் மிகவும்



குறைவாகவே இருக்கலாம்'' என்று சொல்லி விட்டுச் சென்று விட்டார். என் தாய் மிகவும் யோசனை செய்து கடைசியில் தம் தோழியிடம் சொல்ல, திருமணம் தடைப்பட்டது. மாப்பிள்ளை வீட்டார் உண்மையை மறைத்ததும் வெளியானது. பிறகு பெண்ணுக்கு வேறோர் மாப்பிள்ளையுடன் திருமணம் நடந்தது. முதல் மாப்பிள்ளை, அந்த டாக்டர் கூறியபடியே ஆறு மாதங்கள்தான் உயிரோடு இருந்தான்



என்பது குறிப்பிடத்தக்கது!

— என்.வி.ரமணி, சென்னை — 92

### பிடிவாதம் பிடித்த பிள்ளை வீட்டார்!

OO 1930 இல் நடந்தது. காசியாத்திரைக்குப் பிள்ளை புறப்பட வேண்டும். சீர் வரிசையில் வெள்ளிக் கூஜா குறைவதால் காலையில் கல்யாணம் நடக்காது என்று பிள்ளை வீட்டு மாமா கூறிவிட்டார். சமாதான முயற்சிகள் பலிக்கவில்லை. பெண் வீட்டார் தரப்பில் 'நாடி பெரியப்பா' என்று அழைக்கப்படும் முதியவர் எழுந்தார். கல்யாணத்திற்கு வந்திருந்த இளைஞர்களில் சிவப்பாகவும் அழகாகவும் இருந்த பதினெட்டு வயது இளைஞர் ஒருவரை அழைத்தார். ஜரிகை வேஷ்டியைக் கொடுத்து உடுக்கச் சொல்லி, 'நீதான் மாப்பிள்ளை; காசியாத்திரைக்குப் புறப்படு' என்றார். அவ்வளவுதான், ஒரிஜினல் மாப்பிள்ளையே பிடிவாதத்தைத் தூக்கியெறிந்து விட்டு ஓடி வந்து விட்டார்! திருமணம் இனிதே நடக்க, பிள்ளை வீட்டாரின் அந்த மாமா மட்டும் தலைமறைவாகிவிட்டார்!

— ஸ்ரீமதி பட்டம்மாள் ராஜா, சென்னை — 34

### ஜானகியும், எஸ். பி. பி.யும்!

OO என் மைத்துனியின் திருமணம். ஊஞ்சலாடிய சமயம் பெண்ணின் தங்கை பாடிக் கொண்டிருந்தாள். அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்த மாப்பிள்ளையின் நண்பன் ஒருவன், 'அடேங்கப்பா, ஜானகி கெட்டார்' என்று கிண்டலடித்தான். பாடிக் கொண்டிருந்த என் மைத்துனி முகம் சிவக்க, 'இவர் பெரிய எஸ்.பி.பி! சர்ட்டிபிகேட் கொடுக்கிறாராக்கும்' என்று சடக்கென்று கூறியதும், அந்த இளைஞன் வெகு இயல்பாக எவ்விதத் தயக்கமும் இல்லாமல் ஒரு சினிமாப் பாடலைப் பாடினான். கேட்டவர்கள், 'ஃபென்டாஸ்டிக்! எஸ்.பி.பி. மாதிரியே பாடறாரே!' என்றார்கள். ஓராண்டுக்குப் பிறகு அந்த இளைஞனே எனது மைத்துனியைத் திருமணம் செய்து கொண்டான்!

— ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்

### எம். ஜி. ஆர். கொடுத்த பரிசு!

OO சுமார் முப்பதாண்டுகளுக்கு முன்பு கோவில்பட்டி ராமசாமி தியேட்டரில் நடைபெற்ற ஒரு கூட்டத்தில் கலந்து கொள்ள எம்.ஜி.ஆர். வந்திருந்தார். பத்திரிகை நிருபரான நானும் அங்கிருந்தேன். எம்.ஜி.ஆர். பேச எழுந்தபோது, மேடைக்கு அருகில் ஏற்பட்ட சலசலப்பைக் கண்டு விசாரித்தார். 'யாரோ ஒரு பையன் உங்கள் தலைமையில் கல்யாணம் பண்ணிக்கணும்னு வந்திருக்கிறான்' என்றார்கள். 'அப்படியா!' என்ற எம்.ஜி.ஆர். உடனே அந்த இளைஞரையும் பெண்ணையும் மேடைக்கு வரவழைத்தார். 'இந்தத் திருமணத்தில் அனைவருக்கும் சம்மதம்தானே?' என்று கூட்டத்தில் கேட்டுவிட்டுத் தாலியைக் கொடுத்துக் கட்டச் சொன்னார். அதோடு, தமது கழுத்தில் அணிந்திருந்த ஆறுபவுன் தங்கச் சங்கிலியைக் கழற்றி மணமகன் கையில் கொடுத்துப் பெண்ணின் கழுத்தில் அணிவிக்கச் சொன்னார். மணமக்கள் மகிழ்ச்சியோடு சென்றனர். இது மறக்க முடியாத திருமணம்.

— ஜி. கதிரேசன், சிறுமுகை

### காணாமல் போன சங்கிலி!

OO திருமணம் முடிந்து சாப்பிட்ட சந்தோஷத்தில் அவரவரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். மணப் பெண் திடீரென்று ஓடி வந்து தன் கழுத்திலிருந்த சங்கிலிகளில் ஒன்றைக் காணவில்லை என்றாள். எல்லோருக்கும் திக்கென்று ஆகிவிட்டது. அனைவரும் தேட ஆரம்பித்தார்கள். ஆயினும் கிடைக்க வில்லை. மாலையில் ஊர் திரும்பும் சமயத்தில், கூடத்தில் கழற்றி வைக்கப்பட்டிருந்த மணமாலைகளை எடுக்க வந்த போது, காணாமல் போன சங்கிலி அதிலிருக்கக் கண்டோம். ஆம் மணமாலையைக் கழற்றிய போது சங்கிலியையும் சேர்த்துக் கழற்றி விட்டாள் மணப்பெண்!

— ஆர். நாகலட்சுமி, திருவையாறு

# ஏழாவது இரவு

17

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:

துப்பாக்கி வெடித்த ஒலியைத் தொடர்ந்து, விளக்குகள் மீண்டும் ஒளிர்ந்தன. எதிரே மேடையில் பாடிக்கொண்டிருந்தவன் மைக்கைப் பிடித்தவாறே கீழே சரிந்திருந்தான். அவன் நெஞ்சிலிருந்து ரத்தம் வெளிப்பட்டுக் கொண்டிருக்க, நிலைமையை உணர்ந்து கொள்ளச் சில நிமிடங்கள் பிடித்தன. புரிந்து கொண்ட போது —

அந்த ஹாலில் பதற்றமும் பரபரப்பும் சூழ்ந்தன. உட்கார்ந்திருந்தவர்கள் எழுந்து மேடையை நோக்கி ஓட, ரஞ்சனாவும் மாலினியும் அப்படியே அமர்ந்திருந்தார்கள். நிகழ்ச்சியின் தீவிரம் அழுத்திக் கொண்டிருந்தது. திடுமெனத் தாக்கிய அந்த அதிர்ச்சியிலிருந்து மாலினிதான் முதலில் விடுபட்டாள். சொன்னாள்.















... இன்ஸ்பெக்டர் முரளி! கரெக்டா நாம போற நேரத்துக்கு, நாம போற இடத்துக்கு வந்துடறாரே, எப்படி?
எதுவோ, எங்கேயோ இடிக்குது... சரி சரி, எதையும் வெளியே காண்பிச்சுக்காம நட...


பேசி முடித்தவர் திரும்பினார்.
அடடே! பார்க்காத மாதிரி போறீங்களே! ஒரு நிமிஷம் நிற்கலாமா? முக்கியமாப் பேசணும்!


நாசூக்காச் சொன்னாப் புரிஞ்சுக்க மாட்டேன்றீங்களே! மேல, மாடியில என்ன நடந்ததுன்னு பார்த்தீங்க இல்லை?
உங்க.. உங்களுக்கு எப்படி அதுக்குள்ள தெரிஞ்சுது?


எல்லா இடத்துலயும் எனக்குக் கண்ணும் காதும் உண்டு. எனக்குத் தெரியாம இந்த ஊர்ல எதுவும் நடக்க முடியாது. தெரிஞ்சுதா? கடைசித் தடவையாச் சொல்றேன்..


நாளைக்கு இந்த ஊரிலிருந்து போயிடுங்க.
வலுக்கட்டாயமா உங்களை அனுப்பறதைத் தவிர வேற வழியில்லை...
போகாட்டா?
தொடரும்



# "சாயிராம்" என்றார்கள் சிலிர்த்து நின்றார்கள்!

"ஸ்ரீதரா! உங்க பாபா நம்மை இப்படி அம்போன்னு விட்டுட்டாரே! பெட்ரோல் கொண்டு வரச் சொல்லேன்!" என்றார் நண்பர். நிறையவே அலுப்பும், கொஞ்சம் நக்கலும் வார்த்தைகளில் தொனித்தன. ஸ்ரீதரனுக்கு அந்தக் குளிரிலும் 'குப்'பென்று வியர்த்து விட்டது.

இரவு பத்து மணிக்கு மேல் நண்பரின் மோட்டார் சைக்கிள் பிலியனில் அமர்ந்து கரிக்காட்டுக் குப்பம் போனார் சாயி பக்தர் ஸ்ரீதரன். சென்னை புறநகர்ப் பகுதியில் உள்ள ஒரு கிராமம் அது. சத்ய சாயி சேவா சமிதியால் தத்து எடுத்துக் கொள்ளப் பட்டது. அங்குள்ள மக்களுக்காக பகவான் ஸ்ரீ சத்ய சாயிபாபாவின் சிறப்புத் தரிசனத் துக்கு ஏற்பாடாகியுள்ள சந்தோஷச் செய் தியை அவர்களுக்குத் தெரிவிக்கத்தான் சென்றார் ஸ்ரீதரன்.

காரியம் முடிந்து சென்னை திரும்பும் போதுதான் இருபத்தைந்து வயது ஸ்ரீதர னுக்கு இப்படி ஒரு சோதனை. பெட்ரோல் தீர்ந்து போய் நடு வழியில் வண்டி நின்றது ஒரு பொருட்டல்ல. தவறு நம்முடையதாய் இருக்க, தாம் போற்றி வணங்கும் மனித தெய்வத்தையல்லவா பழித்து விட்டான் நண்பன்! அடுத்த ஏழெட்டு கிலோ மீட் டருக்கு 'பங்க்' கிடையாது!

'முணுக் முணுக்'கென்ற விளக்கொளி யுடன் ஒரு பெட்டிக் கடை. தூங்கி வழிந்து கொண்டிருந்த கடைக்காரரிடம் விஷயத் தைச் சொன்னதும் மூடியிருந்த பக்கத்துக் கடையின் சொந்தக்காரரை அவர் விட்டுக் குப் போய் அழைத்து வந்து, கடையைத் திறக்கச் செய்தார். அவர் டின்னில் வாங்கி வைத்திருந்த பெட்ரோலைக் கொடுத்து உதவினார்!

வாயடைத்துப் போனார் நண்பர். "சாயிராம் சாயிராம்" என்று உச்சரித்த வாறே சென்னை திரும்பினார் ஸ்ரீதரன்.

சாயி பக்தர்களைக் கேட்டால் ஒவ் வொருவரும் இதுபோன்ற மெய்சிலிர்க்க வைத்த அனுபவங்களைக் கூறுவார்கள்.

**ச**த்ய சாயிபாபாவின் இவ் வருட சென்னை விஜயம், வழக்கம் போல ஜன சமுத்திரத்தை ஈர்த்தது. தினமும் ஆபட்ஸ் பரி மைதானத்தில் தரிசனத்துக்காக ஐயா யிரம் பேர் போலக் கூடினர். அவர்கள் வசதிக்காகப் பல இடங்களிலும் டீ.வி. பெட்டிகள் நிறுவப்பட்டிருந்தன.

செங்கல்பட்டு, மற்றும் சென்னை நகரத் தின் சாயி சேவா சமிதிகளைச் சேர்ந்த ஐந்நூறுக்கும் அதிகமான ஆண் பெண் தொண்டர்கள் கூட்டத்தையும் போக்கு வரத்தையும் ஒழுங்குபடுத்துதல், ஆபட்ஸ் பரியைச் சுத்தம் செய்வது போன்ற காரியங் களைச் சிரத்தையோடும் மகிழ்ச்சியோடும் செய்தார்கள். கேண்டீனில் சிற்றுண்டியை யும் ஸ்டாலில் புத்தகம், கேஸட், பட விற்பனைகளையும் கவனித்துக் கொண் டார்கள்.

தினமும் காலையில் பகவான் தங்கி யிருந்த, சுந்தரம் — கோவில் பகுதியில் வீதி பஜனை. அது முடியும் சமயம் சத்யசாயி யின் திவ்ய தரிசனம். ஆபட்ஸ்பரியிலும் காலையிலும், மாலையிலும் தரிசனம். தவிர பஜனைகள், கலாசார நிகழ்ச்சிகள்.

சாயி சமிதிகளின் ஓர் அங்கமான 'பால விகாஸ்' அமைப்பைச் சேர்ந்த குழந்தைகள் பல்வேறு மத, இன, கலாசாரங்களின் ஒருங் கிணைப்புக்கு முக்கியத்துவம் தந்து அளித்த நிகழ்ச்சியை, பகவானும், குழந்தை போல ரசித்துப் பார்த்தார்.

சத்ய சாயி சமிதிகளால் தத்து எடுத்துக் கொள்ளப்பட்டுள்ள அயப்பாக்கம், திருமங்கலம் போன்ற பகுதிகளுக்குச் சென்று, அந்த மக்களுக்குத் தரிசனம் தந்து உபதேசித்து அருளினார் பாபா.

ஆன்மீகத்தையும், சமுதாயச் சேவை யையும் இரு கண்களாய்க் கருத வேண்டும் என்று அருளும் பாபாவின் இன்னொரு பொன் மொழி: "பிரார்த்தனை செய்யும் உதடுகளை விட, பிறருக்கு உதவுகிற கைகள் சிறப்பானவை."

— மௌலி

வட்டமேஜை

# "முதலீடம் தானாகவே வரும்!"

● "வீட்டு வசதிச் சாதனங்களால் வேலைப் பளு குறைந்ததா?" என்ற தலைப்பில் தாய்க் குலத்தினரை மட்டும் பேட்டி கண்டுள்ளீர்கள். குடும்பத் தலைவர்கள் சிலரையும் பேட்டி கண்டு விவரங்களை வெளியிட்டிருக்கலாம்!

வெள்ளகால். இரா. சுந்தையா.

● வீட்டு வசதிச் சாதனங்களால் வேலைப் பளு குறைந்ததா?' என்ற கட்டுரையில் குடும்பத் தலைவிகளின் பேட்டி கலவையாக இருந்தது. இதன் மூலம் இத்தகைய நவீன சாதனங்கள் வாங்க முடியாத பெண்களை ஏங்கச் செய்து விட்டீர்கள் என்பது நிச்சயம்.

சென்னை — 45. ஏ. ஜப்பார் காதர்.

● வீட்டு வசதிச் சாதனங்கள் ஆயிரம் இருந்தும், ஆயிரம் வந்தும்... 'பட்டனைத் தட்டி விட்டா இரண்டு தட்டிலே இட்லி வந்து இறங்க வேண்டும்' என்று கலைவாணரும் டி. ஏ. மதுரமும் கண்ட கனவு எப்போது நனவாகும்?

வையம்பட்டி. இரா. அல்லி.

● கப்புடுவைச் செம்மங்குடி பாராட்டுகிறார். வி. பி. சிங்கோடு ராஜீவ் ஜாலியாகப் பேசுகிறார். காலம் ரொம்பக் கெட்டுப் போச்சு போங்க!

சென்னை — 78. வி. எஸ். அனந்தராமன்.

● இருபத்தாறாம் பக்கத்தில் வெளியிட்டிருக்கும், ஐடியா அய்யாசாமியின் சிக்கனமான யோசனை ரொம்பவும் லேட். எங்கள் கோவையில், சென்னை — கொச்சி தேசிய நெடுஞ்சாலையில் யு.எம்.எஸ். ரேடியோ பேக்டரி அருகில் அமைக்கப்பட்டுள்ள, அறிஞர் அண்ணா சிலைக்கு மாலைகள் அணிவிக்க, இந்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. ஐடியா அய்யாசாமியின் யோசனை சுமார் பத்தொன்பது வருடங்களுக்கு முன்பே இங்கு செயல்படுத்தப்பட்டு விட்டது!

கோவை — 27. எஸ். குருசாமி.

● தன் உயிரைப் பற்றிக் கூடக் கவலை கொள்ளாமல் போதை மருந்துகளுக்கு அடிமையாகி, மீள முடியாமல் அப் பழக்கத்திலேயே சிக்கித் தவிக்கும் ஏராளமான இளைஞர்களைத் திருத்த வேண்டுமானால் 'கிரண்பேடி' போல் காவல் துறையில் உள்ள ஒவ்வொரு காவல் அதிகாரியும் உறுதிமொழி எடுத்துக் கொண்டு செயல்பட வேண்டும். அப்படிச் செய்தால் இந்தியாவில் போதை மருந்து என்ற வார்த்தையையே இல்லாமல் செய்து விடலாம்!

வலங்கைமான். வலங்கை எஸ். ரமேஷ்.

● 'ஓர் அமானுஷ அனுபவம்' படித்தேன். பேய், பிசாசு போன்ற அமானுஷ விஷயங்களில் துளியும் நம்பிக்கை இல்லா விட்டாலும், கட்டுரையைப் படித்த போது ஒரு விதச் சிலிர்ப்பையும் த்ரில்லையும் ஏற்படுத்தியது உண்மை!

மதுரை — 1. பிரபாகர் ப்ரியன்.

● மேலாண்மை பொன்னுச்சாமியின் 'கோணல் ஏழுக்கு நாலு' அற்புதமான சிறுகதை. கிராம மக்கள் இந்த இருபதாம் நூற்றாண்டிலும் அறியாமையில் மூழ்கிக் கிடப்பதைத் தத்ரூபமாக விளக்கியிருக்கிறார்.

அரூர். மு. மதிவாணன்.

● சென்னையில் ராஜீவ் பற்றிய கட்டுரை படித்தேன். அதில் 'அடிக்கடி எழும்பிய விஸில் சப்தம் எம்.ஜி.ஆரின் ரத்தங்கள் வந்திருப்பதை உணர்த்தியது' — என்ற வரியினையும் கண்டேன். தமிழக முதல்வர் கூட்டத்தில் மட்டும் 'உடன்பிறப்புகள்' விஸில் அடிப்பது இல்லையா? ஒன்று மட்டும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். அந்த விஸில் அடிக்கும் ரத்தங்களை "கவர்" பண்ணத்தான் இன்று தமிழக முதல்வர், காங்கிரஸ் தலைவர்கள், சினிமா நடிகர்கள் என எல்லோரும் நான் முந்தி நீ முந்தி என்று எம்.ஜி.ஆர். புகழ் பாடிக் கொண்டிருக்கிறார்கள்!

தேனூர் மேட்டுக்கடை. ஏ. ஈஸ்வரன்.

● 'கல்விக்கு இறைக்கும் பணம் ஒவ்வொருவருக்கும் பயன்படேவாக வேண்டும்' என்ற தங்களின் நியாயமான ஆதங்கம், தலையங்க வரிகளில் தங்கமாய் ஒளிர்கின்றன. 'ஒவ்வொரு இந்தியனின் கல்விக் கண்ணும் திறக்கப்பட வேண்டும்' என்று தெளிவாகச் சொல்லிய விதம் அருமை.

போகலூர். அ. இராஜப்பன்.

● 'முன்னுரிமை போதாது; முதலுரிமை வேண்டும்' என்ற தலையங்கம் கண்டு மகிழ்ந்தேன். 'அறிவு அற்றம் காக்கும் கருவி' (குறள்) என்று சொன்னவன் தமிழ்ப் புலவன். மேலைநாடுகளும், கீழை நாடுகளும் (ஜப்பான் போன்றவை) இதைக் கடைப்பிடிக்கின்றன. ஆனால் நாம் விட்டு விட்டோம். இன்று மிக முக்கியமானவர்கள் (VIPs) வரும் போது அமைக்கப்படும் வளைவுகள், மாலைகள் இவற்றைப் பணமாக்கி பள்ளிகட்கு ஈந்தால் முதலீடம் தானாகவே வரும். இஸ்ரேல் நாட்டில் சிகரெட், மதுபானம், கேளிக்கை போன்றவற்றில் ஒரு "SURCHARGE" போட்டு, கல்விக்கூடங்களுக்கு அளிக்கிறார்கள்.

பாண்டிச்சேரி. டாக்டர். கே. வேங்கடசுப்ரமணியன், துணைவேந்தர், பாண்டிச்சேரி பல்கலைக் கழகம்.

● தாராபுரம் வாசகர் தமிழக அரசின் இலவச வேட்டி — சேலை திட்டத்தைக் குறைகூறி எழுதியிருக்கார். முதலில் அரசு தீபாவளிக்கு, மாத வருமானம் ரூபாய் ஒன்றிலிருந்து, இருநூறு வரை உள்ளவர்களுக்கு வேட்டி — சேலை வழங்கப்படும் என்று அறிவித்து அதன்படி வழங்கியது. பிறகு இத் திட்டத்தின் வரம்பை ரூ.300 வரை உயர்த்த வேண்டும் என்று கோரிக்கை எழவே முதல்வரும், பொங்கலுக்கு மாத வருமானம் ரூ. 201லிருந்து 300 வரை உள்ளவர்களுக்கு அரசு வேட்டி — சேலை வழங்கும் என்று அறிவித்தார். அதன்படி அரசு வழங்கியும் வருகிறது. தாராபுரம் வாசகர் குறிப்பிடும் அப் பெண்மணி தீபாவளிக்குச் சேலை வாங்கியிருக்க வேண்டும். தீபாவளிக்கு இலவச வேட்டி — சேலை பெற்றவர்கள் பொங்கலுக்குப் பெற முடியாது. எனவே அவர் கடிதத்தைத் தலைப்புக் கொடுத்துப் பிரசுரித்ததை என்னால் ஜீரணிக்க முடியவில்லை.

கல்லிடைக்குறிச்சி. இரா. சண்முக சுந்தரம்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka